# சிவகிரி குமர சதகம்

பதிப்பாசிரியர்

மெய். சந்திரசேகரன்



# சிவகிரி குமர சதகம்

பதிப்பாசிரியர்

**மெய். சந்திரசேகரன்**




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சி.ஐ.டி. வளாகம், தரமணி

சென்னை-600 113

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the book | : | **Civakiri Kumara Catakam** |
| Editor | : | **Mey. Chandrasekaran** |
| Published by | : | **International Institute of Tamil Studies,**<br>C.I.T. Campus, Tharamani<br>Madras-600 113 |
| Price | : | Rs. 39.00 |
| Publication No. | : | 206 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Date of Publication | : | March, 1995 |
| Number of Pages | : | vi + 182 |
| Paper used | : | 16 kg. S.S. Map Litho |
| Size of the book | : | Demy 1/8 octav |
| Printing types used | : | 10 point |
| Number of copies | : | 1000 |
| Photo-typesetting and Offset Printing by | : | **Pavai Printers Pvt. Ltd.,**<br>142, Jani Jan Khan Road, Royapettah,<br>Madras-600 014. Phone: 83 24 41 |

Published with the financial assistance from the Directorate of Tamil Development, Govt. of Tamil Nadu.

# அணிந்துரை

சு. சு. இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

நமக்கினிமை தரும்படியாக வாய்த்த நல் அமுதாகிய தமிழ் தொன்மையது. முன்னைப் பழைமைக்கும் முன்னைப் பழையதாக விளங்குகின்ற அதே வேளையில் பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியதாக இலங்குகிறது.

இவ்வாறு சீரிளமைத் திறத்துடன் தமிழ் இலங்குவதற்குக் காரணம் காலந்தோறும் பல்வேறு சங்கங்களும், இயக்கங்களும் நிறுவனங்களும் ஆற்றி வருகின்ற பணிகளே.

இவ்வகையில் தற்காலத்தில் தமிழுக்குத் தொண்டுசெய்யும் பல்வேறு அமைப்புகளில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பங்கு கணிசமானது. நுட்பமான புலமைமிக்க பல்வேறு ஆய்வுகளில் ஈடுபட்டு பல்வேறு நூல்களை வெளியிட்டு இந்நிறுவனம் தமிழ்ப்பணியாற்றி வருகிறது.

குறிப்பாக இந்நிறுவனத்தின், தொன்மை வாய்ந்த ஆயிரக்கணக்கான ஓலைச்சுவடிகளைப் பாதுகாத்து வரும் சுவடியியல் துறையின் செயல்பாடு பாராட்டத்தக்க ஒன்று. இத்துறையின்வழி அச்சில் வெளிவராத அழியும் நிலையிலுள்ள பல சுவடிகள் வெளியிடப் பட்டு வருகின்றன. 1979-ஆம் ஆண்டிலிருந்து இத்துறை சுவடியியல் பட்டய வகுப்பினைத் தொடர்ந்து நடத்தி வருகின்றது. ஆண்டுதோறும் ஐந்து மாணாக்கர்களுக்கு மாதம் 300 ரூபாய் உதவித்தொகையும் வழங்கி, சுவடியியலில் பயிற்சியளித்து வருகின்றது. வெறும் ஏட்டுக்கல்வியாகப் பயிலாமல் செயல் முறையிலும் சிறந்து விளங்கும் இப்பயிற்சியில் பங்குபெறுகின்ற ஒவ்வொருவரும் ஆண்டிறுதியில் நிறுவனத்திலுள்ள யாதானுமோர் சுவடியினைப் பதிப்பிக்கின்ற ஆற்றலினைப் பெறுகின்றனர். அவர்களுள் பலர் நல்ல வேலை வாய்ப்புகளைப் பெற்றுள்ளனர். எதிர்காலத்தில் இத்தகு சுவடியியல் அறிவு படைத்தோர் பலர் பல்வேறு பகுதிகளிலும் பரந்து தமிழுக்குத் தொண்டு செய்வார்கள் எனில் அந்தப் பெருமை முழுவதும் இந்நிறுவனத்தையே சாரும். இத்தகு சுவடியியல் பட்டயவகுப்பினை இந்நிறுவனம் ஒன்றே இதுகாறும் நடத்தி வருகின்றது.

மேலும் இந்நிறுவனம் இதுவரை இரு சுவடியியல் குறுங்காலப் பயிலரங்கினை நடத்தியுள்ளது. அவ்வகையில் அண்மையில் நடைபெற்ற பயிலரங்கில் எண்பது மாணவர்கள் கலந்து சுவடியியல் பயிற்சியை முடித்துச் சென்றனர். இன்னும் இதுபோன்ற பல பயிலரங்குகளை இந்நிறுவனம் நடத்தவுள்ளது.

இங்ஙனம் சுவடியியல் துறை தமிழுக்குத் தொண்டாற்றிவரும் இவ்வேளையில் சுவடிகளில் புதைந்துள்ள மாணிக்கங்களைத் தமிழ்ன்னையின் முடியில் பதித்து அழகு பார்க்கும் முகமாகப் பல்வேறு சுவடிகள் நூல்வடிவம் பெற்றுள்ளன.

சித்தமருத்துவம் பெருவழக்காகி வரும் இந்நாளில், கணக்கின்றிக் காணப்படும் சித்த மருத்துவச் சுவடிகளில் சிலவற்றையும், அம்மானை, சதகம் போன்ற சிற்றிலக்கியங்களையும், கதைப்பாடல்கள் சிலவற்றையும் பதிப்பிக்க வேண்டுமென்ற வேணவாவோடு தெரிந்தெடுத்த சில நூல்கள் தற்போது அச்சேறுகின்றன.

தமிழ் இலக்கிய வரலாற்றில் சிற்றிலக்கியங்களுக்கு ஒரு சிறப்பான இடம் உண்டு. அவற்றுள் ஒன்றாக 'சிவகிரி குமர சதகம்' என்ற இந்நூல் அமைகின்றது; குமரனின் தொன்மைச் சிறப்பு, தலப்பெருமை முதலியன அழகுறக் காட்டப்பட்டுள்ளன.

இந்நூல் வாயிலாக ஏற்படும் தமிழ்ச் சிறப்பினை எண்ணி இறும்பூதெய்துகின்ற இவ்வேளையில், நிறுவன மேம்பாட்டிற்கு உறுதுணை புரிகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வியமைச்சர் க. பொன்னுசாமி அவர்களுக்கு நன்றிகூற இந்நிறுவனம் கடமைப்பட்டுள்ளது.

தமிழ் வளர்ச்சித் துறையின் நிதி உதவி பெற்று வெளிவரும் ஆறு நூல்களுள் இதுவுமொன்று. எங்கள் நிறுவனத்தின்பால் பேரன்பு காட்டுகின்ற தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத் துறைச் செயலாளர் திரு. சா. பா. இளங்கோவன், இ.ஆ.ப. அவர்களையும், இச்சுவடி வெளியீட்டுக்கு நிதிவுதவி நல்கிய தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் சி. செல்வராசு அவர்களையும் இவ்வேளையில் நன்றியுடன் நினைவுகூர்கிறேன்.

நூல்களின் அச்சேற்றும் பணிகளை முனைப்புடன் செய்த முனைவர் டி. மகாலட்சுமி அவர்களைப் பாராட்டுகிறேன். இந்நூலினைப் பதிப்பித்த அமரர் மெய். சந்திரசேகரன் அவர்களின் பணி மிகத்தானது. அதற்கு என் பாராட்டு. இந்நூலைக் குறித்த காலத்தில் சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த பார்வை பிரிண்டர்ஸ் நிறுவனத்தார்க்கும் நன்றி.

சுவடிகளை வைத்திருப்போர் எங்களது நிறுவன நூலகத்திற்கு அதனை நல்கினால் தமிழில் பல அரிய நூல்கள் வெளிவர உறுதுணை புரிந்த பெருமைக்கும் சிறப்புக்கும் உரியவர்களாவர்.

**இயக்குநர்**

# பொருளடக்கம்

# பதிப்புரை

நூற்பெயர் - சிவகிரியிலுள்ள முருகன் பெயரில் இயற்றப்பட்டமை யால், அவ்வூர்ப் பெயரும், அவ்விறைவன் பெயரும் இணைத்தே சிவகிரி குமர சதகம் என வழங்கப்படுகிறது.

## சுவடி தேர்ந்த காரணம்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திலுள்ள 'சிவகிரி குமர சதகம்' என்னும் பெயருடைய சுவடி இரண்டும் (எண் 193, 334) விருத்தா சலம் குமாரதேவர் மடத்தைச் சேர்ந்தவை.

தமிழில் சிற்றிலக்கிய வகைகட்குத் தனித்ததொரு இடமுண்டு. உலகின் அன்றாட நிகழ்ச்சிகளுக்கு உதவும் வண்ணம் பல்வேறு உல கியல் கருத்துக்களையும் நீதிகளையும் உணர்த்துவதாய் உள்ள சதக இலக் கிய வகைக்குச் சிறப்பானதொரு இடமுண்டு. இக்காரணத்தாலும் இச் சதகத்தில் இடம்பெற்றுள்ள கருத்துச் சிறப்புகளை வெளிக்கொணர வேண்டும் என்ற பேரவாவினாலும், கருத்துக்களைச் சொல்லிச் செல்லும் சிறப்பின் காரணமாகவும் இச்சுவடி தேர்ந்தெடுக்கப்பட்டது. 'சிவகிரி குமர சதகம்' என்னும் பெயரில் உள்ள இரு சுவடிகளின், இவ்வாய் வேட்டிற்கு முற்றிலும் பயன்படுத்தப்பட்ட சுவடி 193 என்ற எண் ணினைப் பெற்றுள்ள சுவடியே. இன்னொரு சுவடி எண் (334) ஒப்புநோக்குதற்கும், பிற ஐயங்களைத் தெளிவு செய்வதற்குமே பயன் படுத்தப்பட்டது. எனினும் இரு சுவடிகளுக்கும் பெருத்த வேறுபாடு காணப்படவில்லை.

## சுவடியின் அமைப்பு

சுவடியின் நீளம் 43 செ.மீ. அகலம் 2 செ.மீ. ஏட்டின் எண்ணிக்கை 60. சுவடியில் ஒரு துளை இடப்பட்டு கயிறு கோக்கப்பட்டுள்ளது சுவடியின் இருபுறமும் மரச்சட்டங்கள் அமைக்கப்பட்டுள்ளன. சுவடி யின் முடிவில் 'சட்டம்' எனக் கூறப்படும் வெற்றேடு உள்ளது. தொடக் கத்தில் இல்லை; இச்சுவடியில் இந்நூலைத் தவிர வேறு நூல்கள் இல்லை; தனித்ததொரு சுவடியாகவே காணப்படுகிறது.

சுவடியின் தொடக்கத்தில், பாடல் தொடங்குவதற்குமுன் 'சிவமயம், நித்தியானந்த குருவே துணை' என்ற குறிப்பும், அதன்கீழ் 'சிவகிரி குமர சதகம் - பஞ்சரத்தினம்' என்ற குறிப்பும் காணப்படுகிறது. அப்பகுதி யிலேயே பாடல் தலைப்பும் ஏட்டெண்ணும் குறிக்கப்பட்டுள்ளன;

பாடல் முடிவில் பாடல் எண் கொடுக்கப்பட்டுள்ளது. எண்கள் தமிழ் எண்கள். இறுதியில் பாடப்பட்ட ஆண்டு, படியெடுத்தோர் விவரம், பாடல்கள் எண்ணிக்கை ஆகிய குறிப்புகள் உள்ளன.

சுவடி தற்போது நல்ல நிலையிலேயே உள்ளன. ஒருசில இடங்களில் மட்டும் இராமபாண அரசாட்சியின் விளைவு காணப்படுகிறது; என்றாலும் அதிகமில்லை. சுவடியின் 22 ஆம், 40 ஆம் ஏடுகளும், இறுதி இரு ஏடுகளும் சிறிது உடைந்துள்ளன; எனினும் பெரும் இழப்பு ஏற்படவில்லை. பாடலில் ஒரு அசையே விடுபட்டுள்ளது. அதுவும் ஊகித்து எழுதப்பட்டுள்ளது.

## சுவடியில் காணப்படுவன

சுவடியில் மொத்தம் 113 பாடல்கள் காணப்படுகின்றன. பாடல்களின் இவ்வெண்ணிக்கையை,

காப்பு-வெண்பா 2

பஞ்சரத்தினம்-பாடல் 5

சிவமயம்-பாடல் 3

சதகம்-பாடல் 102

வாழிப்பாடல் 1

ஆக செய்யுள் நூத்திப்பதிமூணு

என்று சுவடியில் காணப்படும் இறுதி ஏட்டில் குறிக்கப்பட்டுள்ளது.

காப்பு வெண்பா இரண்டும் விநாயகனைப் போற்றி உரைப்பன. அடுத்துச் சுவடியில் காணப்படுவது சிவமயம் பாடல் மூன்றுமே. இவை பாட்டுடைத் தலைவனின் பெருமையை உரைப்பன. அடுத்துவரும் ஐந்து பாடல்களும் 'சிவகிரி — தோத்திரம் பாயிரம்' என்று குறிப்பிடப்படுகின்றன. இவையே பஞ்சரத்தினம் எனக் குறிப்பிடப்படும் பாடல்களாக இருக்கலாம் எனத் தோன்றுகின்றது. அடுத்து விநாயகர் பெருமையை விரிக்கும் ஒரு பாடலும் தொடர்ந்து நூலும், இறுதியில் வாழிப்பாடலும், அதன்பின் சுவடியைப் பற்றிய பிற விவரங்களும் உள்ளன.

## எழுத்துநிலை

சுவடி பக்கத்திற்கு ஒரு பாடலாக, ஏட்டின் இருபுறமும் எழுதப்பட்டுள்ளது. சீர்களை நான்கு - இரண்டு எனப் பிரிப்பதற்கு ஏற்ப இடையிடையே சிறுகோடு (—) இடப்பட்டுள்ளது. சுவடியின் கையெழுத்து

மிகவும் தெளிவாகவும் அழகாகவும் எழுதப்பட்டுள்ளது. எல்லாச் சுவடி களிலும் காணப்படுவது போலவே 'ற, ர' வேறுபாடு இன்றியும், ல, ள வேறுபாடு இன்றியும், ஒற்றைக்கொம்பு, இரட்டைக் கொம்பு வேறுபாடு இன்றி ஒரே கொம்பாகவும் ன, ண, ந வேறுபாடுகள் இன்றியும், மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளியின்மையும் காணப்படுகின்றன. எனி னும் எந்த எழுத்தாக எழுதப்பட்டிருப்பினும் தெளிவாக, புரியும்படி எழுதப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

ஏடுமுறிவினால் இருபாடல்களில் முதல் அசை ஊகித்து எழுதப் பட்டுள்ளது. ஏட்டின் ஒருபுறம் மட்டும் காணப்படுவதால் அதன் முன் னெழுத்து இதுவாகத்தான் இருக்கும் என பின்வரும் அசையைக் கொண்டு ஊகித்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

சில இடங்களில் எதுகை, மோனை நோக்கி சில தொடர்கள் பேச்சு வழக்கில் வழங்கப்படுவதுபோல் வழங்கப்பட்டுள்ளன. இவை எதுகை, மோனை கருதி திருத்தப்படவில்லை.

**சான்று**

குண்ணேறி வைகிய (32)

இத்தொடர் 'குன்றேறி வைகிய' என்பதன் மாற்றுவடிவம். எனினும் இதன் முன்வரும் எதுகைகள் 'வெண்ணீறு, கண்ணீர், தண்ணீர்' என வருவதால் இதனையும் திருத்தாது குண்ணேறி என்றே பதிப்பிக்கப் பட்டுள்ளது.

## யாப்பு

காப்புப் பாடல்கள் இரண்டும் வெண்பா யாப்பினால் ஆனவை; அடுத்து வரும் சிவமயம் பாடல்கள் மூன்றில் முதல்பாடல் பன்னிருசீர் சந்த விருத்தமாகவும், ஏனைய இருபாடல்கள் எண்சீர் விருத்தமாகவும் அமைந்து உள்ளன; அடுத்துவரும் பஞ்ச ரத்தினம் பாடல்களும் சதகப் பாடல்களும் பன்னிரு சீர் விருத்தமாக அமைந்துள்ளன.

## சுவடி படியெடுத்தவர்

சுவடியின் இறுதியில் உள்ள ஏட்டால் சுவடி எப்பொழுது யாரால் படியெடுக்கப்பட்டது என அறியமுடிகின்றது.

> விரோதிகிருதி வருடம் மகரமாதம் 25-ம் தேதி மஞ்சக்குப்பம் ஜில்லா, விழுப்புரம் தாலுக்காவைச் சேர்ந்த, அணையேறி கிரா மத்தில் இருக்கும், கணக்கு அலங்காரப்பிள்ளை குமரன் சுப்பிராயப் பிள்ளை நெட்டெழுத்து

எனவரும் குறிப்பால் இச்சுவடியைப் படியெடுத்தவர் அணையேறி கிராமத்தைச் சேர்ந்த, அலங்காரப்பிள்ளை என்பவரின் மகனாகிய சுப்பிராயப்பிள்ளை என்பது தெளிவாகிறது. இவர் படிசெய்த காலமும் விரோதிகிருதி வருடம் மகரமாதம் 25 ஆம் தேதி (சுமார் 1861) எனவும் தெரியவருகிறது. இக்குறிப்பினால் சுவடி படிசெய்து இத்துணை காலம் (சுமார் 120) ஆகிறது என்று அறியமுடிகிறது. இதனால் இச்சுவடி மூலச்சுவடி அன்று என்பது தெரியவரும்.

## சுவடியை வாசித்தவர்

சுவடியினை வாசித்தவர் பற்றிய குறிப்பும் சுவடியில் இறுதி ஏட்டில் உள்ள குறிப்பால் அறியமுடிகிறது.

> விழுப்புரம் தாலுக்காவைச் சேர்ந்த, மாத்தூரில் இருக்கும் செம்பலிங்க (செம்புலிங்க) முதலியார் வாசிக்கப்பட்ட சிவகிரி குமர சதகம்

எனவரும் குறிப்பால் இச்சுவடியை வாசித்தவர் விழுப்புரம் தாலுக்கா மாத்தூரைச் சேர்ந்த செம்புலிங்க முதலியார் என அறியமுடிகிறது.

## பார்வையாளர் செய்ய வேண்டியது

சுவடியைப் பார்வையிடுபவர் செய்ய வேண்டியது இதுவெனச் சுவடி குறிப்பிடுகிறது.

> இது எடுத்தவர் பார்வையிட்டுக் கொண்டு கொடுத்துவிட வேண்டியது. அப்படிக் கொடுக்காவிட்டால் சிஷ்டக்கிடக்கம்.

## ஆக்கினை

இச்சுவடி இன்னார்க் கட்டளையால் படிசெய்யப்பட்டது எனக் குறிப்பதுபோல் இறுதி ஏட்டில்

> நித்திய பரிபூரணானந்த மெய்ஞ்ஞான தேசிகராகிய அருணாசல சுவாமி யாள்கினை (யாக்கினை)

என ஒரு குறிப்புக் காணப்படுகிறது. எனினும், இப்பெயருடையார் பற்றிய செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை.

சுவடியைப் பற்றிய பிறவிபரங்கள் முன்பே பதிப்புரையில் தரப் பெற்றுள்ளதால் ஈண்டு மீட்டும் குறிக்கப்பெறவில்லை. நூலின்காலம் தெளிவு செய்ய இயலவில்லை. 'சிவகிரி ஊஞ்சல்' என்னும் பெயரில்

கோவை பேரூர் மடத்தில் ஒரு சுவடி இருப்பதாகத் தெரியவருகிறது. இது குறித்து விளக்கமான செய்தி ஏதும் கிடைக்கவில்லை. 'சிவகிரி எமக அந்தாதி' என ஓர் அந்தாதி நூலும் கிடைத்துள்ளது. இச்சிவகிரி இப்பெயரிலேயே இருக்கும் மற்றொரு சிவகிரியாகும். இதுபற்றிய குறிப்புத் தலச்சிறப்பில் எடுத்து இயம்பப் பட்டுள்ளது.

## ஆசிரியர் வரலாறு

### பெயர்

இந்நூலினை எழுதிய ஆசிரியர் பெயர் இன்னதென்று உறுதியாக அறிய இயலவில்லை. எனினும் பாடல்களில் காணும் பலகுறிப்புகள் கொண்டு 'குப்பய்யன்' என்பது இவரது பெயராக இருக்கலாம் எனத் தோன்றுகின்றது.

குப்பய்யன் சிந்தைதனில்
குடிகொண்ட தெய்வமே அடியேனை வுன்னிட்க்
கோகனத் தாளிலார்வாய் (11)

எனவரும் பாடற்பகுதியால் இக்கருத்து தோன்றுகின்றது.

### சமயம்

வீரசைவ மடமாகிய ஞானியார் மடாலயத்தினைச் சேர்ந்த சிவகுன் றத்தைப் பாடி இருப்பதாலும், வீரசைவ அடியார்களாகிய 'சங்கமர் களை'க் குறிக்கும் சொல்லைப் (8) பயன்படுத்தி இருப்பதாலும் நூலா சிரியர் சமயம் வீரசைவம் ஆக இருக்கலாம் என அறியமுடிகிறது.

### குரு

இவருடைய குருவாக இருந்தவர் கோவல் ஆதீனக் குருமணி எனப்படும் 'சிவசண்முக ஆறுமுக மெஞ்ஞான தேசிகராக' இருக்கலாம் எனத் தோன்றுகிறது. பல பாடல்களில் தன்னை யாட்கொண்ட குரு வாக இவரைக் குறிப்பிடுகின்றார்.

திருவளர் கோவலுறை ஆறுமுக மெஞ்ஞான
தேசிகனும் வீற்றிருந்து
சிவஞான நிட்டையி லுறைந்தமலை யல்லாது
தேவர்முதல் முனிவரேத்தி
சிரமீது நற்கரங் கொண்டுபணி கின்றமலை
சிவசண்முக கத்தேசிகன்
செங்கரங் கூப்பித்தொழு தேத்துமலை (6)

குருவடிவாய் சண்முகமாய் அடியா ருய்யக்
 குவலையமெல் லாந்தழைக்க கோவல் மேவி
ஒருமொழியை யுதவிபர கதியை நல்கும் (4)
என்மொழியைக் கேட்டுவரங் கேற்றிக் கொண்ட
 என்குருவே சண்முகமா மிறையே போற்றி (5)

என்பனபோல் வரும் தொடர்களால் இதனை அறியமுடிகிறது. மேலும் இந்நூலையே இவர் முன்னிலையிலேயே அரங்கேற்றி இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

## இறையருள் பெறல்

மேலும் இவர் முருகன் அருள் பெற்றவர் என்பதை,

செப்பரிய யெழுவகைப் பிறவிக் கறங்கினின்
 சேருமெனை யாளவேண்டி
தேசமதில் மாந்தரி னுருக்கொண்டு குருவாகி
 செவியிலுப தேசயருளி (19)
வலியவெனை யாளவே ஆறுமுக மீராறு
 மலர்நயன மிருதாள்களும்
மணிமவுலி குண்டலங் கடப்பமலர் மாலையும்
 மறைத்துகுரு வடிவாகியே
மலமகல வஞ்ஞான இருளொழிய மெஞ்ஞான
 மதவுதவி செய்யவேண்டி
வாழருணை மானகரில் மன்னாரு சாமிவாழ்
 வளமான கோட்டகத்து
மலர்வாவி நந்தவனந் தனிலே யொருவரும்
 மறியாத யிடமேவியே
மனதுலய மாகவே வுபதேச மருளியே
 மலரடி தரித்தபரனே (110)

எனவரும் பாடல்கள், இவர் முருகன் அருள்பெற்றவர் என்பதை உறுதிப்படுத்துகின்றன.

## காலம்

ஆக, இவருடைய பாடல்களால் இவருடைய பெயர் 'குப்பய்யன்' என்பதாக இருக்கலாம் எனவும், சமயம் 'வீரசைவம்' எனவும், குரு சிவசண்முக ஆறுமுக மெஞ்ஞான தேசிகர் எனவும், இறையருள் (முருகன்) பெற்றவர் எனவும் கணக்கிடலாம். ஆறுமுக மெஞ்ஞான

தேசிகர் பற்றிக் குறிப்பிடுவதால், நூலாசிரியர் இவருக்குப் பின் வாழ்ந்த வராகவோ, சமகாலத்தவராகவோ இருக்கலாம் — அதாவது இவருடைய காலம் ஆகிய கி.பி. 1673-1769-க்குப் பின்னாக அல்லது இதே காலத்தைச் சார்ந்தவராக இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

## சதக இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

### சதக இலக்கியம்

'சதகம்' என்னும் இச்சொல் வடமொழிச்சொல். வடமொழியில் 'சதம்' என்னும் சொல்லிற்கு நூறு என்பது பொருள். எனவே சதகம் என்பது நூறு பாடல்களை உடைய ஓர் இலக்கிய வகையைக் குறித்தது.

சதகம் என்னும் இவ்விலக்கிய வகை தமிழில் மட்டுமின்றி வட மொழி, கன்னடம், மலையாளம், தெலுங்கு முதலிய மொழிகளிலும் காணப்படுகிறது. இவ்விலக்கிய வகைமைப் பற்றி முதன்முதலில் திரு வாசகத்தில், திருச்சதகம் என்ற பெயரில் ஒரு பகுதி காணப்படுகிறது. இது நூறு பாடல்களை உடையதாய் அந்தாதி அமைப்பில் உள்ளது. இத்திருச் சதகம் என்பதற்கு, 'தெய்வத் தன்மை வாய்ந்த நூறு திருப் பாட்டுக்களைத் தன்னகத்துக் கொண்ட ஒரு பகுதி' எனப் பண்டிதமணி அவர்கள் விளக்கம் அளிப்பார்.[1] இவ்வாறு எண்ணிக்கை அடிப்படையில் நூல்கள் தோன்றி வழங்கியமையை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து போன்றவற்றால் அறிந்தாலும் இவ்வாறு 'சதகம்' எனும் அமைப்பில் ஒரு தனி இலக்கிய வகை பிற்காலத்தே தான் தோன்றியது. தமிழில் தனியொரு சதக இலக்கியம் தோன்றிய காலம் கி. பி. பதினோராம் நூற்றாண்டே. இக்காலத்தில் எழுந்ததே, முதல் சதக இலக்கியமாகக் கருதப்படும் 'ஆறைகிழாரின் கார்மண்டல சதகம்' என்பது. இதன்பின் தொடர்ந்து பல்வேறு சதக இலக்கியங்கள் தோன்றின. கி. பி. 17, 18, 19-ஆம் நூற்றாண்டு சதக இலக்கியத்தின் பொற்காலம்.[2]

முதலில் இவ்விலக்கியம் தொகுப்பு நூலாகவும், பின்னரே தனி நூலாகவும் தோன்றியது.[3] இதனை உறுதிசெய்யும் வண்ணம் பின்வரும் கூற்று அமைந்துள்ளது.

> "வேதகாலத்திலே ஐதரேய பிராமணத்திலுள்ள சுபச்சேபன் கதையிற் பல நீதி உரைகளுண்டு. நீதி சாத்திரங்களிலும், தர்ம சாத்திரங்களிலும் இவை பெருவரவாயிருக்கின்றன. இத்தகைய நல்லுரைகளை நூறு நூறு ஆகத் தொகுத்துச் சதகம் என்று பெயரிட்டனர். பிற்காலத்தில் புலவர்கள் சதகமாகவே பாடத்தொடங்கினர்"[4]

வடமொழியில் சுமார் கி.பி. 500 ஆண்டுகட்கு முன்பே சதக இலக்கியம் இருந்தமையை அறியமுடிகிறது. இவ்வடமொழிச் சதகங்கள் கர்மம், காமம், மோட்சம் என்னும் முப்பொருளைப் பற்றிய நூறு நூறு சுலோகங்களை உடையதாய் அமைந்திருந்தன. தர்மத்தைப் பற்றிக் கூறுவனவற்றை 'நீதி சதகம்' என்றும், கர்மத்தைப் பற்றிக் கூறுவனவற்றை, 'சிருங்கார சதகம்', என்றும், மோட்சத்தைப் பற்றிக் கூறும் சதகங்களை 'வைராக்கிய சதகம்' என்றும் குறிப்பிட்டனர்.

கன்னட மொழியில் 'ஹரிஹரன்' என்பவர் (12-ஆம் நூற்) பம்ப சதகம், ரக்ஷாசதகம் என்பவற்றை எழுதியுள்ளதாகத் தெரிகிறது. இவை பிரண்டும் வீர சைவசமயத்தைச் சார்ந்தவை. விருகாக்ஷர் மீது பக்தன் வைத்த பக்தியை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது. பின் 16-ஆம் நூற்றாண்டில் 'ரத்னாகவானி' என்பவர் திரிலோக சதகம், அபராஜிதேஸ்வர சதகம் ஆகிய இரு சதகங்களை இயற்றியுள்ளார். முன்னது 100 பாடலுக்கு மேற்பட்டது; பின்னது நீதி, வைராக்கியம், ஆன்ம சிந்தனை ஆகியவற்றை விளக்குவதாய் அமைந்தது. அதன்பின் 17-ஆம் நூற்றாண்டில் 'திருமாலாரியன்' என்பவர் 'சிக்கதேவராஜன்' என்பவன் பெயரில் 'சிக்க தேவராஜசதகம்' என்பதை இயற்றி உள்ளதாகத் தெரிய வருகிகிறது.[5]

தெலுங்கு மொழியில் மற்ற மொழியை விடச் சதக இலக்கியங்கள் அதிகமாகத் தோன்றியுள்ளன. தெலுங்கில் மட்டும் சுமார் 900 சதகங்கள் உள்ளன.[6] பார்வதீஸ்வர சாஸ்திரி என்பவர் 30 சதகம் பாடியதாகத் தெரிகிறது (1833-97). அமலபுரசன்யாசிகவி என்பவர் (1820-1860) நூற்றுக்கு மேற்பட்ட சதக இலக்கியங்கள் பாடியுள்ளார்; எனினும் 32 சதகங்களே கிடைக்கின்றன. பல்குரிகி சோமநாதர் (1200) என்பவர் 'விருஷதீப சதகம்' என்பதையும், அன்னமய்யா (1240) என்பவர் 'சர்வேஸ்வரசதகம்' என்பதையும் பாடியுள்ளார். புகழ்பெற்ற தெலுங்கு சதகங்களாக, சுமதி சதகம், வேமன சதகம், பாஸ்கர சதகம், குமார சதகம், குமாரி சதகம் என்பனவற்றைக் குறிப்பர். இராமாயண, பாரதத் தொடர்பாகவும் பல்வேறு சதகங்கள் தோன்றியுள்ளன. இனிப் பொருளடிப்படையில் தெலுங்குச் சாதகங்களைப் பின்வருமாறு பிரிப்பர்.

1. ஆசிரியன் தன்னையே முன்னிலைப் படுத்தியது — வேமன சதகம், கவிசெடைப்ப சதகம், சரபாங்க சதகம்.

2. முன்னிலைப்படுத்தும் விளித்தொடர் இன்றி அமைவன — மாத்ரு அப்பாவு மொதலி என்பவரின் மாத்ரு சதகம், நரல வெங்கடேசன் வரராவின் வாஸ்தவமு நர்லவரி மாதா சதகம்.

3. கலைமகளை முன்னிலைப்படுத்துபவை — 'பாரதிசதகம், சரஸ் வதி சதகம்.

4. சூரியனை முன்னிலைப்படுத்துபவை — சூரிய சதகம், சூரிய நாராயண சதகம், பாஸ்கர சதகம், சாயாபுத்ரசதகம்.

5. மனத்தை முன்னிலைப்படுத்துபவை — சித்த சதகம், மானசச் சதகம், பரமாத்ம சதகம், சுமதி சதகம்.

6. அங்கதத் தன்மையது — அடிடம் சூரண்ணா என்பவரின் ராம லிங்க சதகம்.

7. அகப்பொருட் தொடர்பானது - வங்கயலபதி வெங்கடகவி என்பவரின் மதனகோபால சதகம்.

8. அறிவுறுத்துபவை — வேமன சதகம், சுமதி சதகம், புத்ரசதகம், குமாரி சதகம்.

9. மொழி, அறிவியல் தொடர்பானவை — சீதாபதி என்பவரின் பாரதி சதகம்.

10. கஸ்தூரி ரங்க கவி என்பவர் சிசாயாப்பில் 'சம்பா' என்ற சொல் பாடல்தோறும் இடம்பெற்றுவர ஒரு சதகம் இயற்றியுள்ளார். இது மற்ற சதகங்களில் இருந்து வேறுபட்டுத் தெலுங்குச் சொற்களின் அகராதியாக விளங்குகிறது. யமக யாப்பில், யமக சதகம் என்ற பெய ரின் கனபவரவு வெங்கடகவி என்பவர் ஒரு சதகம் இயற்றியுள்ளார். ஆதிசேஷகவி என்பவர் கொச்சேர்லதம்மா சதகம் என்பதை இயற்றி யுள்ளார். இவ்வாறு தெலுங்கு மொழியில் சதக இலக்கியம்[7] பெரு வழக்குப் பெற்றுள்ளது.

தெலுங்குமொழியைப் போல் இல்லாவிடினும் மலையாள மொழி யிலும் ஓரளவு சதக இலக்கியம் தோன்றி வளர்ச்சி பெற்றுள்ளமையை அறிய முடிகிறது.[8] கேரளத்தில் எழுந்த வடமொழிச் சதகங்களே மலையாள மொழிச் சதகங்களுக்கு முன்னோடி எனலாம். நாராயண நம்பூதிரி என்பவர், ஆஸ்லோ சதகம் என்பதையும், தேவதேவ ஈசானு பூதி என்பவர் ராமசதகம், கிருஷ்ண சதகம், வாசுதேவ சதகம் என்ப வற்றையும், தேவராஜபட்டன் என்பவர் ராமாயண சதகம் என்பதையும், ராமப்பணிவாதன் குஞ்சன் நம்பியார் என்பவர் முகுந்த சதகம் என்ற பெயரிலேயே இரண்டு சதகங்களையும், வீரகேரள மகாராஜா என்பவர் பூர்ணத்ரயீச சதகம் என்பதையும், கேசவப்பிள்ளை என்பவர் கவிசமாஜ யாத்ரா சதகம், ஆசன்னமரண சிந்தா சதகம் என்னும் இரு சதகங்களை யும் பாடியுள்ளதாகத் தெரியவருகிறது. ஆசிரியர் பெயர் அறியப் படாமல், அத்வைத சதகம் என்று ஒரு சதகம் கிடைத்துள்ளது.

இவ்வாறு தமிழ், வடமொழி, கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய அனைத்து மொழிகளிலும் சதக இலக்கியங்கள், தோன்றி வளர்ந்து சிறப்புற்றிருத்தலைக் காணமுடிகிறது.

## இலக்கணம்

சிற்றிலக்கிய வகைகளின் இலக்கணம் கூறுவனவாய் அமைந்த பாட்டியல் நூல்கள் எல்லாமே சதக இலக்கியத்திற்கு உரிய இலக் கணத்தைக் குறிப்பிடவில்லை, காரணம் சதக இலக்கியம் தனியொரு வடிவம் பெறும் முன்பே பல பாட்டியல் நூல்கள் தோன்றியமையே. எனினும் இலக்கண விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம் என்னும் மூன்று பாட்டியல் நூல்களும் சதக இலக்கியத்திற்கு இலக்கணம் வகுக் கின்றன.

விளையும் ஒருபொருள் மேலொரு நூறு
தழைய வுரைத்தல் சதக மென்ப[9]

எனவும்,

சதகம் என்பதுவே சதகச்செய்யு ளாலே
அகப்பொருள் புறப்பொருள் இரண்டிலொன்று அறைதலே[10]

எனவும்,

அகப்பொருள் ஒன்றன் மேலாதல் புறப்பொருள்
ஒன்றன் மேலாதல் கற்பித்து ஒருநூறு
செய்யுள் உரைப்பது சதகமாம் என்ப[11]

எனவும்,

பயிலும் ஒருபாட்டில் நூறுஉரைப்பது தான்சதகம்[12]

எனவும் பாட்டியல் நூல்கள் சதக இலக்கியத்திற்கு இலக்கணம் வகுக் கின்றன.

அதாவது அகப்பொருள் புறப்பொருள் ஆகிய இரண்டனுள் யாதா னும் ஒரு பொருள் மீது நூறு பாடல்களைக் கொண்டு வருவது சதகத் தின் இலக்கணமாகும். ஆனால் இவ்வெண்ணிக்கைக்கு மீறியும் பாடல் கள் வருவதைக் காணமுடிகிறது. அவையடக்கம்; கடவுள் வாழ்த்து, வாழிப்பாடல் போன்றன அமைதலே காரணமாம்.

இனி, சதக இலக்கியத்தின் பாடல் யாப்பினைப் பற்றி உரைக்கு மிடத்து, பெரும்பாலான சதகங்கள் பன்னிரு சீர் பதினான்கு சீர் ஆசிரிய விருத்தங்கள் சிறுபான்மை கட்டளைக் கலித்துறை, கலிவிருத்

தும், வெண்பா ஆகியவற்றாலும் பாடப்பெறுகிறது எனினும் ஆசிரிய விருத்தமே பெரும்பான்மை.

## பொதுவியல்பும் அமைப்பும்

சதக இலக்கியங்கள் பொதுவாக சில இயல்புகளைக் கொண்டுள் ளன. அவற்றைப் பொருளியல்பால் பின்வருமாறு வகைப்படுத்துவர்.

1. கடவுளை முன்னிலைப்படுத்துதல்.
2. அறவுரைகள் கூறுதல்
3. ஒழுக்கங்களை விரித்து வரையறுத்தல்
4. பெருமை தருவன இவையெனல்
5. நல்லோர் நற்குணம், தீயோர் தீக்குணம் இவையெனல்.
6. உபமானம் முதலியவற்றால் கருத்துக்களைப் புலப்படுத்துதல்.
7. பழமொழி போன்றவற்றைக் கொண்டு கருத்து விளக்குதல்.

இவ்வியல்புகளை எல்லாச் சதகங்களும் கொண்டுள்ளன என உறுதி யாகக் கூற இயலாது. ஒவ்வொரு சதகமும் ஒவ்வொரு வகையில் இவற் றில் ஒரு சிலவற்றை ஏற்றுக்கொண்டும், ஒருசிலவற்றை விடுத்தும் பாடி யுள்ளன.

சதகங்கள் அனைத்திலும் காணப்படும் ஒரு பொது இயல்பு 'மகுடம்' பெறுதல். அதாவது பாடலின் இறுதியடிகள் ஒன்றே போல் அமைவது; இவ்வாறு அமையும்போதும் பெரும்பாலும் நூற் பெயரையும், பாட் டுடைத் தலைவனின் பெயரையும் கொண்டு முடியும். ஓரோ வழி மாறி யும் அமையும். 'செயங்கொண்டாரே' என மகுடம் பெற்று அமைகிறது செயங்கொண்டார் சதகம் மட்டும். மற்ற சதகங்கள் எல்லாம் பெரும் பாலும் ஒரே அமைப்பினையே கொண்டுள்ளன.

## மூன்று பிரிவுகள்

பொருண்மை அடிப்படையில் சதகங்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை,

1. வரலாற்றுச் சதகங்கள்
2. துதிச் சதகங்கள்
3. நீதிச் சதகங்கள்

இம்மூன்று வகைகளையும் மேலும் சில வகைகளாகப் பிரிக்கலாம்.[13] அவை,




## வரலாற்றுச் சதகங்கள்

இவ்வகையில் வரும் சதகங்கள் வரலாற்றிற்குத் துணைபுரியும் வண்ணம் சிறந்த முறையில் அமைந்துள்ளன. நாட்டு அல்லது மண்டில வரலாற்றினைப் பற்றியுரைக்கும் சதகங்கள் நல்லதொரு ஆய்வு மனப்பான்மையுடன் அந்தந்த நாட்டின் வரலாற்றை, எல்லைகளைக் கூறிச் செல்லல், அரச பரம்பரையினரின் வரலாறு, வள்ளல்கள், புலவர்களின் வாழ்க்கைச் சிறப்பு அங்குத் தோன்றிய இலக்கிய வகைகளின் சிறப்பு, அந்நாட்டின் பல்வேறு வளங்கள், செழுமைச் சிறப்பு, ஆற்று வளம், சோலை, கோயில் ஆகியவற்றின் சிறப்பு, அங்கு வாழ்ந்த சான்றோர்கள் பெருமை ஆகிய அனைத்தையும் எடுத்தியம்புகின்றன. இதனைக் கொங்குமண்டல சதகம், தொண்டை மண்டல சதகம், பாண்டி மண்டல சதகம், சோழ மண்டல சதகம் போன்றவற்றால் அறிய முடிகிறது. இனி தொண்டர்களைப் பற்றியுரைக்கும் சதகங்கள் தொண்டர்கள் வரலாறு, பெருமை போன்றவற்றை விளக்கிச் செல்கின்றன. இதனைத் திருத்தொண்டர் சதகம் போன்றவற்றால் அறியலாம். இவ்வரலாற்றுச் சதகங்கள் வழிப் புலவர்கள் வெறும் கற்பனையை மட்டும் பாடிச்செல்பவர்கள் அல்லர். ஆய்விற்குத் துணைசெய்யும் பல்வேறு வரலாற்றுக் கருத்துக்களைத் திரட்டித் தருபவர்களாக இருந்துள்ளனர்.

## துதிச் சதகங்கள்

இறைவனைப் புகழ்ந்து பாடுவன, தனிமனிதர்களைப் போற்றி யுரைப்பன ஆகியவற்றை இதனுள் அடக்கலாம். இறைவனைப் புகழ்ந்து பாடுவன இறைவன் இறைவி ஆகியோரது அருட்செயல்களையும், சமயச் செய்திகள், புராணக் கதைகள், தத்துவக் கருத்துக்கள், இடையிடையே நீதிகள், அறிவுரைகள் போன்ற பல்வேறு வகையான செய்திகளையும் விளக்கிச் செல்கின்றன. பெரும்பாலான இறைச் சதகங்கள் இவ்வமைப்பிலேயே உள்ளன. நடராச சதகம் என்னும் நூலில் சிவ பூசை, அதற்கேற்ப உபகரணங்கள், சிவலிங்க வகைகள், அவற்றை வழிபடுதற்குரியோர், வழிபாட்டுமுறை, திங்கள், ஆண்டு, அபிடேகம், அவற்றின் பயன், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால் வகைநெறி, உருத்திராக்க மகிமை போன்ற பல செய்திகளைத் திறம்படக் கூறிச்செல்கிறது. இனி, தனியொருவர் பேரில் அமைந்த துதி நூல்கள் வள்ளல்கள், அடியார்கள் போன்ற சிறப்பிற்குரியார்களைப் போற்றி உரைப்பதாய் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. வடவேங்கட நாராயண சதகம், அவயாம்பிகை சதகம், அருணாசல சதகம், எம்பிரான் சதகம், திருவேங்கடவன் சதகம், அறப்பளீச்சுர சதகம் என்பவற்றை இவ்விரு வகைக்கும் சான்றாகக் காட்டலாம்.

## நீதிச் சதகங்கள்

சதகங்களுள் சிறப்பாக கருதத்தக்கவை நீதிச் சதகங்கள். மக்கள் வாழ்க்கைக்கு அன்றாடம் உதவும் நீதிகளை எடுத்துணர்த்தி மக்களை நல்வழிப்படுத்துவனவாய் இச்சதகங்கள் அமைந்து உள்ளன. இவ்வகைச் சதகங்களில் நால்வருணத்தார் இயல்பு. அவர்கள் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள், நல்லோர் இயல்பு, தீயோர் இயல்பு செய்யத் தகுவன, தகாதன, வேதியற் குறிப்பு, மருத்துவக் குறிப்பு, வானவியல், சோதிடக் குறிப்பு, மக்கள் கடமை, வேசையர் குறிப்பு, மனைநூல் சாத்திரம், பூப்பிலக்கணம், பயணம் செய்ய ஏற்ற நாட்கள், முடிவெட்ட ஏற்ற நாள், புத்தாடை உடுத்த ஏற்ற நாள், சகுனம் பற்றிய குறிப்பு, பெண்களின் இயல்பு போன்ற பல்வேறு உலக நடப்புகளை எடுத்துரைக்கின்றன. இச்சதகங்கள் நீதிகளையும், உலகியல் இயல்புகளையும் வெறுமனே எடுத்துக் கூறாது பழமொழி, புராணக்கதை, உவமை போன்றவற்றின் வாயிலாகச் சுவைபட எடுத்து உரைக்கின்றன. தண்டலையார் சதகம், ஜெயங்கொண்டார் சதகம், கோவிந்த சதகம், கயிலாசநாதர் சதகம், சேசுநாதர் சதகம், குமரேச சதகம் போன்றன இவ்வகைக்குச் சிறந்த சான்றுகள்.

## பெயர்பெறும் முறை

நூலுக்குப் பெயரிடும் முறையை உரைக்கும் இடத்து நன்னூலார்,

முதனூல் கருத்தன் அளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் தன்மைமுதல் நிமித்தினும்
இடுகுறி யானும்நூற் கெய்தும் பெயரே[14]

என இக்காரணங்களால் பெயர்பெறும் என்பர். அவ்வகையில் சதக இலக்கியங்களும் சில முறைகளைப் பின்பற்றிப் பெயர்பெற்றுள்ளதைக் காண முடிகிறது. முதலாவதாக, சதகம் என்ற பொதுப்பெயர் அளவு (எண்ணிக்கை) அடிப்படையில் பிறந்தது. இது எல்லாச் சதக இலக்கியங் களுக்கும் பொதுவான கருத்து. இரண்டாவதாகப் பாட்டுடைத் தலைவர் களின் பெயர் கொண்டு வருவது. இதற்குச் சான்றாக இந்நூலையும் (சிவகிரி குமர சதகம்) குமரேச சதகம், அவயாம்பிகை சதகம் போன்ற வற்றையும் காட்டலாம். மூன்றாவதாக இறையடியார்கள், தொண்டர் கள் தனிமனிதர்கள் பெயர்களைக் கொண்டு வருவது. இதனை அகத் தீசர் சதகம், முகையிதீன் சதகம், திருத்தொண்ட சதகம், இயேசு சதகம் ஆகியவற்றால் அறியலாம். அடுத்து இப்பெயர்களுடன் (பாட்டுடைத் தலைவர்) ஊர்ப்பெயர்களையும் சேர்த்து வழங்குவது. இதனை இந் நூற்பெயராகிய சிவகிரி குமர சதகம் என்பதாலேயே அறியலாம். அடுத்து தனித்து ஊர்ப்பெயர் கொண்டு வருவது, இதனைச் சோழ மண்டல சதகம், கொங்குமண்டல சதகம் போன்றவற்றால் அறியலாம்.

## முடிவுரை

இவ்வாறு சதக இலக்கியங்கள் தாம் தோன்றிய கால, இட வரலாற் றினையும், தொண்டர் பெருமை முதலியவற்றையும் நீதி அறிவுரை, சமுதாய நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கம் முதலியவற்றை எக் காலத்து மக்களுக்கும் பயன்படும் வகையில் எடுத்துணர்த்தி இலக்கிய உலகில் தமக்கென ஒரு தனித்த இடத்தைப் பெற்றிருகின்றன.

# தலச்சிறப்பு

## வரலாற்றுச் சிறப்பு

### திருக்கோவலூர்

தமிழ்நாட்டில் நடுநாட்டு நகர்களில் தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள தென்பெண்ணை ஆற்றின் தென்கரையில் கோவலூர் உள்ளது. இந்நாடு பழங்காலத்தில் 'மலாடு' என்னும் சிறுநாட்டின் தலைநகராக

இருந்தது. மலையமான் நாடு என்பதே இவ்வாறு மலாடு என மருவியது. இந்த நாட்டை ஆண்ட மன்னர்கள் 'மலாடர்' எனப் பெற்றனர். இம்மன்னர்களில் தலை சிறந்தவனாக விளங்கியவன் 'மலையமான் திருமுடிக்காரி' இவன் கடையெழு வள்ளல்களில் ஒருவனாவான். இவன் வள்ளண்மையில் மட்டும் சிறந்தவன் அல்லன்; போராற்றலிலும் பேராற்றல் காட்டியவன். இவனைப் பற்றி நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு சிறுபாணாற்றுப்படை ஆகிய இலக்கியங்கள் போற்றிக் கூறியுள்ளன. சைவ அடியார்கள் அறுபான் மூவரில் ஒருவரான மெய்ப்பொருள் நாயனார் இந்நகரிலிருந்தே அரசாண்டார் எனப் பெரிய புராணம் கூறுகிறது. இந் நகரை ஆண்ட தெய்வீகன் என்னும் அரசனுக்குப் பாரிமகளிரை ஔவையார் மணமுடித்தாரென்னும் கதையும் வழங்குகிறது.

## இலக்கியத்தில் திருக்கோவலூர்

இந்நகர்ப் பற்றிய குறிப்புகளைப் பல்வேறு இலக்கியங்களில் காணலாம். மலையமான் திருமுடிக்காரியைப் பற்றி உரைக்கும்போது,

> துஞ்சா முழவின் கோவற் கோமான்
> நெடுந்தேர்க் காரி கொடுங்கால் முன்றுறைப்
> பெண்ணை யம்பேரி யாற்று நுண்மணல்[15]

என அகநானூற்றுப் பாடல் ஒன்றும் 'கோவல்' எனத் திருக்கோவலூரினைக் குறிப்பிட்டுச் செல்கின்றது. இதில் இருந்து 'கோவல்' எனத் திருக்கோவலூரை நெடுங்காலமாக வழங்கும் வழக்கம் இருந்தை அறிய முடிகிறது.

## சமயச் சிறப்பு

இத்தலம் சைவசமயச் சிறப்பு வாய்ந்த ஒரு தலமாகும்; சம்பந்தர், அப்பர் ஆகிய சமயக்குரவர்களின் பாடல் பெற்றது. அட்ட வீரட்டத் தலங்களில் இதுவும் ஒன்று. சிவபெருமான் அந்தகன் என்னும் அசுரனை அழித்த இடமிது; மேலூர், கீழூர் என இருபிரிவுகளை உடையது. கீழூரிலே வீரட்டம் என்னும் சைவக் கோவில் உள்ளது. இறைவன் வீரட்டேசுரர்; இறைவி சிவானந்தவல்லி; தீர்த்தம் பெண்ணையாறு. மேலூர் என்று வழங்கும் பகுதியில் திருமால் திருக்கோயில் உள்ளது. திருமால் நின்ற திருக்கோலத் திரிவிக்கிரமன்; தாயார் பூங்கோவல் நாச்சியார். ஆழ்வார்கள் பாடிய சிறப்பினை உடையது.

## வேறு பெயர்கள்

பரம ஆரியபுரம், ஆதித்தபுரம், சிவபுரம், விரிபுரம், அச்சுதபுரம், சுவாராணகர், உரோமசன்னூர், காளிபுரம், சுவரிமாபுரம், திருக்கை வேலர்புரம், கணேசபுரம், வியாழபுரம், நாகபுரம், கபிலபுரம், தரும புரம் பார்க்காவனூர், மிருகன்புரம், ராகவனூர், கிருட்டினாராணியம் போன்ற பலபெயர்கள்[16] உண்டு. கல்வெட்டுகளில் இவ்வூர்,

> ஜயங்கொண்ட சோழமண்டலத்து மலாடான ஜகந்நாத வளநாட்டுக் குறுக்கை கூற்றத்துத் திருக்கோவலூர்[17]

எனக் குறிப்பிடப்படுகிறது.

## பெயர்க்காரணம்

'அல்' (அஞ்ஞான இருளைப்) போக்கி அருள்வதற்காகவே, 'கோ' (அவ்விருளுக்கும் பசுக்கள் யாவற்றினுக்கும்) தலைவனாய் வீரட்டநாதன் வீற்றிருக்கும் இடமாகிய, திருக்கு (மனமாசுகளை யெல்லாம்) ஓவல் (தன் செயல் கேட்டு) அடக்கியிருக்கத் (தவமுதியோர் வீற்றிருக்கும்) ஊர்' என திருக்கோவலூரின் பெயர்க்காரணத்தை விளக்குவன. அதாவது, அஞ்ஞான இருளகற்றும் தலைவனாகிய சிவனும், தவமுதி யோர்களும், மனமாசகற்றி இருக்கும் ஊர் என்பதாம்.[18]

## கோவல் ஆதீனம்

இத்திருக்கோவலூரில் தோன்றிய வீரசைவ மடமே 'கோவல் ஆதீ னம்' என அழைக்கப்படுகிறது. இதன் முதல் ஆதீன குருமணி, 'கோவல் ஆதீனக் குருமணி எனப்படும் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெஞ்ஞான சிவா சாரிய சுவாமிகள்' என்பவர். இவர் ஆறாம் குகை நமச்சிவாயர் என் னும் ஞானியாரிடம் அருள் உபதேசம் பெற்றவர். இவ்வாதீனக் கர்த் தாக்கள் திருக்கயிலாய பரம்பரையைச் சார்ந்தவர்கள். இவருக்கு 'ஞானி யார்' என்ற வேறுபெயரும் உண்டு. அதன் காரணமாக 'ஞானியார் மடம்' எனவும் இவ்வாதீனம் அழைக்கப்படும். ஞானியார் — இந்நூலா சிரியர் இவ்வாதீனக் குருமணிகளில் ஒருவரிடமோ அல்லது முதற் குருமணிகளிடமோ அருள் உபதேசம் பெற்றவராய் இருத்தல் வேண்டும் என்பது இவர்பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. ஒவ்வொரு பாடலின் மகுடத்திலும்,

> கோவனக ராறுமுகநற்
> குரவனடி யார்களடி பரவ......

எனவும், சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் (17) (19) என்வும் வரும் குறிப்பாலும் அறியமுடிகிறது.

மேலும்,

குருவடிவாய் சண்முகமாய் அடியா ருய்யக்
குவலயமெல் லாந்தழைக்க கோவல் (5)

எனவும்,

என்மொழியைக் கேட்டுவரங் கேற்றிக் கொண்ட
என்குருவே சண்முகமா மிறையே போற்றி (5)

எனவும்,

திருவளர் கோவலுறை ஆறுமுக மெஞ்ஞான
தேசிகனும் வீற்றிருந்து (6)

எனவும்,

தொல்வினைகள் மாற்றியே ஞானசற் குருவாகி
சொல்லாமற் சொல்லுமொழியால்
பண்டுவினை நீக்கியெனை நின்கழலி லாளர்க்கி
பரிவாகி சென்னிமீதிற்
பங்கய மலர்ப்பதஞ் சூட்டிபர மானந்தப்
பாற்கடலி லாழ்த்திமிகவும் (60)

எனவும் இது போன்று பல பாடல்களில் குறிப்பிடுவதாலும் மேற் குறிப்பிட்ட கருத்தினை இவை உறுதிசெய்கின்றன எனலாம்.

இவ்வாதீனத்திற்குச் சொந்தமாகத் திருக்கோவலூர், திருப்பாதிரிப் புலியூர், வண்டிப்பாளையம், சிவகுன்றம், ஆரணி, திருமுதுகுன்றம் ஆகிய ஊர்களில் மடங்கள் உள்ளன. இத்தலங்களில் இன்றும் முருக வழிபாடு செய்யப்பட்டு வருகிறது. இவற்றுள் 'சிவகுன்றம்' எனப்படு வதே இந்த நூலாசிரியரால் 'சிவகிரி' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## சிவகிரி

சிவகிரி என்னும் பெயரில் இரு முருகன் தலங்கள் உள்ளன. இவற் றுள் ஒன்று; திருநெல்வேலி மாவட்டத்தில் தென்காசியில் இருந்து இருபத்தாறு ஆறாவது மைலில் உள்ளது; மற்றொன்று ஈண்டு நூலாசி ரியரால் குறிப்பிடப்படும் சிவகிரி ஆகும். இத்தலம் விழுப்புரத்தின் அருகில் உள்ள அநந்தபுரத்தை அடுத்துள்ள மலை. இதனைச் 'சிவ

குன்றம்' எனவும் குறிப்பர். இக்குன்றம் திருக்கோவலூர் ஆதீனத்திற்குச் சொந்தமானது. செஞ்சியில் இருந்து மிகவும் அருகாமையில் உள்ளது.

அண்டர்புகழ் கின்றமலை யண்ணாம லைக்குநிக
ரானமலை யொன்றுமில்லை
அந்தமலை குணபா லமர்ந்தமலை செஞ்சிமலை
யாகுமதன் தென்பாலிலே
தொண்டர்பணி கின்றமலை தண்டலைகள் சூழ்மலை
சோதிமலை யாகிவளருந்
தூயமலை மாமயில்கள் மேயுமலை ஞானமலை
சுந்தரநி றைந்திடுமலை (9)

என இம்மலையைப் பற்றி நூலாசிரியர் உரைத்துச் செல்வார். இதிலிருந்து இம்மலையின் இருப்பிடத்தை — எல்லைகளைக் கோடிட்டுக் காட்டுவதை அறியலாம். அதாவது, 'அண்டர்கள் புகழ்கின்ற தனக்கு நிகரொன்றுமில்லா மலையாகிய அண்ணாமலையின் குணபாலில் (கிழக்கு) உள்ள செஞ்சி மலைக்குத் தெற்குப் பக்கம் உள்ள பல்வேறு வளங்களையும், சிறப்புகளையும் உடையமலை' எனக் குறிப்பிடுகின்றார்.

மலையின் மீது கோயில் உள்ளது; சுனைகள் இரண்டு உள்ளன; தெய்வத் திருமேனிகள் நிறைந்துள்ளன. குகை ஒன்றும் ஒடுக்கம் ஒன்றும் உள்ளன. அநந்தபுரத்தில் இருந்து மூன்று கல் தொலைவு நடந்தே வர வேண்டும். இம்மலையில் உள்ள குகையில் ஞானியார் மடாலயத்தின் முதற் குருநாதராகிய 'கோவல் ஆதீனக் குருமணி' அவர்கள் சுமார் 16 ஆண்டுகள் தங்கித் தவம் புரிந்தார்கள் என்பர். அவர்கள் தவம் புரிந்த குகைகளில் செல்வதாயின் சுமார் 20 கெஜ தூரம் தவழ்ந்தே செல்ல வேண்டும். அங்குத் தவமிருந்த காலத்துப் புற்றுமண்ணும் கற்றாழையும் நீரும் ஆகிய இவற்றையே உணவாகக் கொண்டனர் என்பர். மேலும் இவர்கள் உள்ளிருந்து தவம்புரியும் காலத்து வெளியே வன விலங்குகள் காவல் காத்து நின்றதாகவும் உரைப்பர். இம்முதற் குருநாதர் மீது அவர் மாணவரால் இயற்றப்பட்ட 'நெஞ்சுவிடு தூது' என்னும் நூலில், தன் குருநாதர் வணங்கிய பல்வேறு இடங்களைப் பற்றிக் குறிப்பிடுமிடத்து,

............................ நண்ணுஞ்
செருக்கோவு மெய்யடியார் சிந்தித் திறைஞ்சுந்
திருக்கோவ லூரரவன்வாழ் சீரூர் — உரைக்குமிடத்
தின்னம் பலபதியுண் டெங்கோ னிடமவைதான்

பொன்னம் பலமருணை ககரமோ — முன்னரிய
காளத்தி காஞ்சி கமலா லயமண்ட
கோளத் துயருமுது குன்றமென — நீளுந்
திருப்பா திரிப்புலியூர் சீர்வெண்ணெய் நல்லூ
ரூரத்தோ தறையணிநல் லூரும் - விருப்பாகச்
சேயாலு வெள்ளாற்றந் தீரவோத்தூ — ராடுதுறை
தூயசிவ குன்றமுதற் றொல்பதிக — ணேயமுறு[19]

என விரிவாக விளக்கிச் செல்வார். இவ்விடங்களில் 'தூயசிவ குன்றம் என இம்மலையைப் பற்றிப் புகழ்ந்துரைப்பர்.

நூலாசிரியரும் ஒவ்வொரு பாடலிலும் இம்மலையின் பெயரைச் சிவகிரி' எனவே குறித்துச் செல்வார். இம்மலையின் பல்வேறு வளங் களையும் 6 — 10 வரையுள்ள பாடல்களில் பலவாறு புகழ்ந்துரைப்பர். ஞானியாரடிகள் இம்மலையில் உறைந்து தவம் செய்த உண்மையை,

திருவளர் கோவலுறை ஆறுமுக மெஞ்ஞான
தேசிகனும் வீற்றிருந்து
சிவஞான நிட்டையி லுறைந்தமலை (6)

எனவும்,

சிவசண்மு கத்தேசிகன்
செங்கரங் கூப்பித்தொழு தேத்துமலை (6)

எனவும் குறிப்பிட்டுச் செல்வதைக் காணலாம். மேலும் சிவமலையின் பல்வேறு பெருமைகளை,

கயிலைமலை நிகரொத்த மயிலேறு சேவகன்
கந்தமுறை சிவமலையதே
பஞ்சபா தகமெலா யொழிக்குமலை யன்பாக
பணிவோ ரிடத்துயரெலாம்
பறிக்குமலை பாவலர் புகழ்த்துபணி கின்றமலை
பாருலகெ லாந்தழைக்க
அஞ்சலென வந்தமலை ஆனந்த மாகுமலை
அரிபிரமர் முனிவர்முதலாய்
அனுதினமும் வலமாக வந்துபணி கின்றமலை
அருந்தவர்கள் வாழ்த்தருள்மலை (7)

தந்தியொடு கரடிபுலி வாழுமலை நீடுமலை
தாங்குமலை பாங்குபெறவே
சரணென் றடைந்தவர்ப் பிறவிதுயர் தீர்க்குமலை
சங்கமர்கள் வாழ்ந்திடுமலை (8)

எனப் பலவாறாக மலையின் பல்புகழ், இயற்கைவளம், போன்றவற்றை எடுத்துரைப்பதைக் காணலாம்.

இவ்வாறு பல்வளமும் பெற்றுச் சிறப்புடன் விளங்கும் இம்மலையில் உறையும் குமரசரவண முருகனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பலவாறாக அவன் பெருமைகளை விரித்துரைப்பதே இந்நூல்.

## பாட்டுடைத் தலைவனின் பெருமைகள்

### தொன்மைச் சிறப்பு

முருகனின் தொன்மையைக் காலவரையறை கண்டு உரைத்தல் என்பது எவராலும் இயலாது. ஏனெனில் மனிதன் என்று தோன்றி னானோ அன்றே இறை வழிபாடும் தோன்றியது. ஆகையால் மனித னின் தோற்றமே முருகனின் தோற்றம் எனலாம். தமிழ் தன்னிகரற்ற தெய்வமொழியாகப் பொலிவுறக் காரணம் முருகனே. முருகனால் தமிழ், தெய்வத் தமிழாகவும், தமிழால் முருகன், தமிழ்த் தெய்வமாகவும் போற்றப்பட்டு பெருமைப்பட்டு வருகிறது. தமிழே முருகன் எனவும், முருகனே தமிழ் எனவும் கூறலாகும் சிறப்புடைத்தாம். இவ்வாறு தமிழுடன் யிணைந்து தமிழ்க். கடவுளாய் விளங்கும் முருகனைப் பற் றியக் குறிப்பைத் தொல்காப்பியம் தொட்டு, தொன்று தொட்டு சீரும் சிறப்புடன் இலங்கிவரும் பல்வேறு இலக்கியங்களிலும் காணமுடிகிறது.

ஐவகை நிலப்பிரிவையும் அதற்குரிய தெய்வங்களையும் பற்றி உரைக்குமிடத்து,

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்[20]

எனத் தொல்காப்பியர் உரைப்பர். ஈண்டு மைவரை உலகளாவிய குறிஞ்சி நிலத்தைப் பற்றி — அதற்குரிய தெய்வத்தைப் பற்றி உரைக்கு மிடத்து முருகனை — சேயோன் எனக் குறிப்பிடுவார். குறிஞ்சி நிலக் கடவுள் என்று குறிக்கப்படும் முருகன்,

வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளும்.....[21]

என வெறியாட்டின் போதும் சுட்டப்படுகின்றான். அடுத்து சங்க இலக்கியங்களில்,

தாமரை புரையும் காமர் சேவடி
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த அஞ்சுடர் நெடுவேல்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகமே[22]

செங்களம் படக்கொன்று அவுணர்த் தேய்த்த
செங்கோல் அம்பின் செங்கோட்டு யானை
கழல்தொடி சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந்தட்டே[23]

பொய்யா மரபின் வார்முது வேலன்
கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி
முருகென மொழியும்....[24]
நளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி
அணங்குடை அவுணர் ஏமம் புணர்க்கும்
சூருடை முழுமுதல் தடித்த பேரிசைச்
கடுஞ்சின விறல்வேள்....[25]

பாயிரும் கனிக்கடல் பார்துகள் படப்புக்குச்
சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தமர் உழக்கித்
தீயழல் துவைப்பத் திரியவிட் டெறிந்து
நோயுடை நுடங்குளர் மாமுதல் தடிந்து
வென்றியின் மக்களுள் ஒருமையொரு பெயரிய
கொன்றுணல் அஞ்ஞாக் கொடுவிளைக் கொல்தகை
மாய அவுணர் மருங்கறத் தபுத்தவேல்
நாவலந் தண்பொழில் வடபொழில் ஆயிடைக்
குருகொடு பெயரிய மால்வரை உடைத்து
மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை[26]

படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேள் பேணத் தணிவேள் இவளென
முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூறக்

களம்நன்கு இழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிவப்பப் பாடிப் பலிகொடுத்து
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகு ஆற்றுப் படுத்த......[27]

நெடுவேள் மார்பின் ஆரம் போலச்
செவ்வாய் வானம் தீண்டி மீனதும்
பைங்காற் கொக்கின் நிறைபரை உகப்ப
எல்லை பைப்பயக் கழம்பிக் குடவயிற்
கல்சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு[28]

சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேள்
சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து[29]

கொடிநுடங்கு மறுகிற் கூடற் குடாஅது
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய
ஒடியா விழவில் நெடியோன் குன்றத்து[30]

இருநிலத் தன்ன நோன்மைச்
செருமிகு சேஎய்..........[31]

முருகற் சீற்றத் துருகெழு குருசில்[32]
கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியற்
சூர்நவை முருகன் சுற்றத் தன்ன[33]
முருகுமெய்ப் பட்ட புலைத்தி போல[34]
ஒன்னாதார்க் கடந்தடூஉம் உரவுநீர் மாகொன்றை
வென்வேலன் குன்றின்.........[35]

ஆலமர் செல்வன் அணிசால் மகன்வழா[36]

என இவ்வாறு பல்வேறு வகையாக முருகப் பெருமானின் திருநாமம், உறைவிடச் சிறப்பு, ஊர்திச்சிறப்பு, அவனுடைய பல்வேறு வென்றிகள், அவனால் வெறியாட்டயர்தல், போர்ச்சிறப்பு போன்ற பலவும் எட்டுத் தொகை நூல்களில் விளங்க உரைப்பதைக் காணமுடிகிறது.

சங்க இலக்கியங்களில் எட்டுத்தொகையில் ஒன்றான பரிபாடலில் முருகனின் தனிச்சிறப்புகள் பலவாறாகப் புகழ்ந்து உரைக்கப்படுவது போல், பத்துப்பாட்டு நூல்களில் ஒன்றான திருமுருகாற்றுப்படை முருகனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்ற பெருமையை உடையது. திருமுருகாற்றுப்படையில் முருகனின் பிறப்பு, அவனுடைய திருவுருவச் சிறப்பு, அவனுடைய போர்ச்செயல்கள், அவ

னுடைய ஆறுபடை வீடுகளின் பெருமை, அடியார்க்கருளும் திறம் என இவ்வாறு பல்வேறு செய்திகளும் விளக்கப்படுகின்றன. முதல் ஆற்றுப் படை நூலாக விளங்குவதுடன் முதலில் தோன்றிய முருகன் பற்றிய நூல் எனினும் மிகையாகாது.

வன்கை வினைஞர் அறிபறை யின்குரல்
த்ளிமழை பொழியுந் தண்பரங் குன்றில்[37]

செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்
வெறியாடு மகளிரொடு செறியத் தாருய்க்
குழலகவ யாழ்முதல
முழவதிர முரசியம்ப
விழவறா வியலாவனத்து[38]

அருங்குறும் எறிந்த கானவர் உவகை
திருந்துவேல் அண்ணற்கு விருந்திறை சான்மென
நறவுநாட் செய்த குறவர்தம் பெண்டிரொடு
மான்ரேற் சிறுபறை கறங்கக் கல்லென
வான்றோய் மீமிசை அயருங் குரவை[39]

எனப் பத்துப்பாட்டு நூல்களும் முருகனின் பல்வேறு பெருமைகளை — திருவிழாச் சிறப்பு, குரவைச் சிறப்புப் போன்றவற்றைப் பகர்வதைக் காணலாம்.

சங்க இலக்கியங்களை அடுத்துவந்த சிலம்பு, மேகலை ஆகிய இரு பெருங்காப்பியங்களிலும் முருகனின் பல்வேறு பெருமைகள் விளக்கப் பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இளங்கோவடிகள் பல இடத்தும் முருகனைப் பற்றிக் குறிப்பதுடன், குன்றக் குரவையில் முருகன் புகழ் பாடும் பக்தராகவே மாறி விடுவதைக் காணமுடிகிறது. இது போலவே மேகலையாசிரியரும் முருகனின் பெருமையைப் பல விடத்தும் உரைப்ப துடன், முருகனை ஆலமர் செல்வனின் மகனாகக் கூறுவதையும் காணலாம்.

இவ்வாறு தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், சிலம்பு, மணி மேகலை ஆகிய பல்வேறு இலக்கியங்களிலும் முருகனின் தொன்மைச் சிறப்புப் பலவாறு புகழ்ந்துரைக்கப்படுகிறது. இவ்வாறு பலவாறாகப் போற்றப்பட்டு வந்த முருகப் பெருமானின் பெருமையைப் பின்வந்த பல்வேறு இலக்கியங்களும், முருக அடியார்களாகிய அருணகிரிநாதர், குமரகுருபரர் போன்றவர்களின் பாமாலைகளும், ஔவையார் போன் றோரின் தனிப்பாடல்களும், பின்வந்த துதிநூல்களும் போற்றி வளர்ந்து வந்துள்ளமையைக் காணமுடிகின்றது.

முருகனின் இத்தகு தொன்மை பிற்காலத்தே தனியொரு சமயமாக 'கௌமாரம்' என்ற பெயரில் தனித்ததொரு இடத்தைப்பெற்று சிறந்துள்ளது. பின்வந்த சான்றோர்களாகிய வள்ளலார், திரு. வி. க போன்றோரும் முருகனின் பெருமையைப் பலவாறாகப் புகழ்ந்துரைத்துள்ளனர். இவற்றை விரிப்பின் பெருகுமாதலால் அவை ஈண்டு விரித்து உரைக்கப்படவில்லை.

## முருகனின் திருப்பெயர்கள்

இம்முருகப் பெருமானுக்குரிய திருநாமங்களையும் பலவாறாகக் கூறுவர். முருகனின் பல்வேறு திருநாமங்களை,

முருகன்வேள் சாமியாறு முகன்குகன் குடிகள் மாயோன்
மருகன்வேய் கார்த்திகேயன் வரைபக வெறிந்தோன் செட்டி
அரன்மகன் கங்கை மைந்தனுண் டலைக்கொடி யுயர்ந்தோன்
சரவணபவன் கடம்பன் றாரகற் செற்றோ னாசான்[40]

எனச் சூடாமணி நிகண்டு உரைக்கும்.

முருகன் — அழகு, இளமை தெய்வத்தன்மை
கந்தன் — சேர்க்கப்பட்டவன், சத்துருக்களையழிப்பவன்
வேள் — விரும்பப்படுபவன்
சாமி — எல்லாமுடையவன்
ஆறுமுகன் — ஆறுமுகங்களை உடையவன்
குகன் — காப்பவன், இரகசியமானவன், தன்சேனைகளைக் காப்பவன்
குழகன் — அழகன்
மாயோன் மருகன் — திருமாலின் மருமகன்
சேய் — செந்நிறமுடையவன்
கார்த்திகேயன் — கார்த்திகைப் பெண்களின் புத்திரன்
வரைபக எறிந்தோன் — கிரௌஞ்சமலையைப் பிளந்தவன்
செட்டி — வைசியனாகப் பிறந்தவன்
அரன்மகன் — சிவனுக்கு மகன்
கங்கைமைந்தன் - கங்கையின் மைந்தன்
ஆண்டலைக் கொடியுயர்ந்தோன் — கோழிக்கொடியை உடையவன்
சரவணபவன் — சரவணப்பொய்கையிற் பிறந்தவன்
கடம்பன் — கடம்பமாலை தரித்தவன்
தாரகற்செற்றோன் — தாரகனைக் கொன்றவன்
ஆசான் — குரு

எனப் பெயர்களுக்கு விளக்கம் அளிப்பர். திரு.வி.க.வும், முருகனின் திருநாமச் சிறப்புப் பற்றிக் கூறும்போது,

> முருகு என்பது பலபொருள் குறிக்கும் ஒருசொல். அப்பல பொருளுள் சிறப்பாகக் குறிக்கத்தக்கன நான்கு. அவை மணம், இளமை, கடவுட்டன்மை, அழகு என்பன. இந்நான்கு பொரு ளடங்கிய ஒரு சொல்லால் பண்டைத் தமிழ் மக்கள் முழுமுதற் பொருள்கள் முறையே உறைதற்கிடம்பெற்றுள்ள முருகன் என் இளமையும் எல்லாப் பொருளையும் கடந்தொளிருந் தன்மையும், அழியா அழகும் இறைவனிடத்தில் இலங்குவது கண்டு, அப் பொருள்கள் முறையே உறைதற்கிடம் பெற்றுள்ள முருகன் என் னும் சொல்லை, அவ்விறைவனுக்குப் பழம் தமிழ் மக்கள் சூட்டி யதன் திறமையை நோக்குழி அவர்களது கூர்த்த மதி புலனா கிறது.[41]

என வியந்துரைப்பர். குறிஞ்சி நிலத்துக்குத் தலைவனாதல் பற்றிக் 'குறிஞ்சிக் கிழவன்' எனவும் முருகப் பெருமானுக்குப் பெயரிட்டு மகிழ் வர். நூலாசிரியரும் முருகனின் பல்வேறு திருப்பெயர்களை (பின் னிணைப்பு — 1) கூறிச் செல்வதைக் காணமுடிகிறது.

# நூலாய்வு

## முருகனின் பிறப்பு

முருகனின் பிறப்பைப் பற்றி இலக்கியங்களிலும், புராணங்களிலும் உரைப்பது போன்றே நூலாசிரியரும் முருகப் பெருமான் சிவபெருமான் நெற்றியில் இருந்து தோன்றியவன் எனவும், சரவணப் பொய்கையில் கார்த்திகை மகளிர்களின் பிள்ளையாய்த் தவழ்ந்தவன் எனவும் குறிப் பிட்டுச் செல்வதை,

சரவணப் பொய்கையி லுதித்தசண் முககா (17)
முக்கணான் பரமேட்டி திருநுதல் தன்னிலே
மொய்ம்புட லுதித்து (26)

என வரும் பாடற் பகுதிகளால் அறியலாம்.

## திருவுருவச் சிறப்பு

முருகப் பெருமானின் திருவுருவச் சிறப்பையும் ஆசிரியர் பல வாறாக விரித்துச் செல்கிறார். திருமுருகாற்றுப்படை போன்ற இலக் கியங்கள் நவில்வது போல் திருவுருவின் ஒவ்வொரு பாகத்தையும் விளக்கி உரைக்கவில்லையாயினும் வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் முருகப் பெருமானின் உருவ வருணனையைக் கூறிச்செல்கின்றார்.

திருமுகங்க ளோராறுஞ் சயிலம் போன்ற
திண்டோள்கள் பனிரெண்டு செங்கை வேலுங்
கருணைகுடி கொண்ட கண்கள் விளங்க மார்பிற்
கடம்பமலர் மாலைதனைக் கரந்து தூயக்
குருவடிவாய் சண்முகமாய் அடியா ருய்யக்
குவலையமெல் லாந்தழைக்க...... (4)

விண்ணவர் தொழுங்கமல பாதமதி லணிகின்ற
வெண்டைய வினோதவழகும்
விரிகதிர் பொதிந்த மகுடமுடைச் சென்னியும்
வேலேந்தி நின்றகரமும்
கண்ணுமண முருகிதிரு வழகொழுகு வதனமுங்
கடப்பமலர் மாலைமார்பும்
கனகவரை நிகரிலா திரள்புயமு மீராறு
கண்களும் விளங்க (40)

என்பனபோல வரும் பாடற்பகுதிகளால் முருகப் பெருமானின் திரு வுருவச் சிறப்பை அறியமுடிகிறது.

## அருட்செயல்கள்

முருகனின் அருட்செயல்களாக ஆசிரியர் பல கருத்துகளைக் கூறிச் செல்கிறார். பெரும்பான்மையாக முருகப் பெருமான் தேவர்கள் பொருட்டு சூரபத்மன் முதலான அசுரர்களுடன் போரிட்டுக் கொன்று வெற்றி வாகை சூடிய செய்தியையே அதிகம் குறிப்பிடுகிறார். அடுத்து பிரமனைக் குட்டிச் சிறை இருத்தமையைக் குறிப்பிடுகிறார். ஒரு சில இடங்களில் தனக்கு அருள் செய்து ஆட்கொண்டமையைக் குறிப்பிடு கின்றார்.

ஆளிமுக மாசூரர் கோடிசத கோடிபுலி
யாம்கொடி தானநிருதர்
சூழபுடை சூழபுவி மேவிவர வாளைமுக
மாவுனர் கோடிசூழ

தூளிக எனமுற்று சூரர்வர வுலகமூடியது
சங்கமத வெங்களிறுகளுஞ்
சுத்திவர வாசிகளு மெத்தனை ரதத்திரளு
மெத்தனைபதா தியுடனும்

வாளிபல தூவிபுயல் போலதும ராடியெதிர்
வந்தசூரன் னொந்தலறிட
மார்பினைப் பிளந்து பலவாளி கணையேவிபடை
மாய்த்துகுரு திப்பெருகவே
கூளிநட மாடச ராடிவிளை யாடுவோம் (94)

என சூரன் வதையை விளக்கி உரைப்பர். இனி இதுபோலவே பலவிடங் களில் விரித்துரைக்கும் மற்றொரு அருட்செயல் பிரணவத்தின் பொருள் அறியாத பிரமனை குட்டி சிறை இருத்தியதும், சிவபெருமானுக்கு உபதேசம் அருளியதும் எனலாம்.

செங்கமலக் கண்ணினாய் பங்கயன் சிரத்தினிற்
திருக்கரத்தால் புடைத்தெழு
குங்குமப் பயோதரக் குறமங்கைப் பங்கனே (11)

பூமேவு சரவணப் பொய்கையி லுதித்தரன்
புனிதத்திருச் செவிதனிற்
போதனை யுரைத்தும் வேதமுத லாகம
புராணமிக துதிசெய்வதும் (12)

குருவாகி சிவனுக்கு செவியிலுரை செய்தவா (15)

என்பனபோல் வரும் பாடற்றொடர்களால் இதனை அறியமுடிகிறது.

## தேவியர் பெருமை

தெய்வயானையையும், வள்ளி நாயகியையும் தேவியாகக் கொண்ட பெருமைக்குரியவன். இவ்விருவரைப் பற்றிய குறிப்புக்களும் பல பாடல் களில் காணப்படுகிறது. இதனை,

கும்பமுலை வள்ளிதெய் வானைமண வாளனே (20)

என்று குறிப்பிட்டுள்ளார்.

வள்ளியம்மையின் அழகினைப் பலபாடல்களில் விதந்து கூறுவார்.

## வாகனப்பெருமை

முருகப் பெருமானின் வாகனமாகிய மயில், தகர் இரண்டின் பெருமையையும் ஆசிரியர் அழகுடன் விளக்குகிறார். மயிலேறி வரை துகளதாக உலகங்களை விசயம் செய்தமையையும் விளக்கி உள்ளார்.

நெடியகடல் சூழ்புவியு முலகங்க ளீரேழும்
நேமிகிரி யேமகூடம்
நீலகிரி யிமையகிரி மந்திரகிரி மகமேரு
நிகரிலா விற்கிரியும்
பொடிபட வேவலமாகி நடனமிடு தோகைமயில்
பொலிந்தருள் மலர்ப்பாதனே (82)

அட்டகோண ணங்களும் யீரேழு லோகமும்
அண்டபகி ரண்டங்களும்
அதிரம கமேருவும் பணிராசன் வெருவவவும்
அசுரர்கள் நடுக்கமிடவும்
வட்டமிட் டேநடன மிட்டுவரு மஞ்ஞையில்
மகிழ்ந்தேறு கின்றகுகனே (86)

வண்டார் கடப்பமலர் மாலைவாய் செறிமயிர்
வருடையி லுகந்தேறி (105)

எனவரும் பாடற்பகுதிகளால் இதனை அறியலாம்.

## விழாக்கோலம்

முருகப் பெருமானின் பல்வேறு சிறப்புகளை விரித்துரைக்கும் ஆசிரியர் முருகனுக்கு உகந்த நாளாகிய கார்த்திகைத் திருநாளினைப்

பற்றியும் ஒரு சில பாடல்களில் உரைத்துச் செல்கிறார். மலையின் பெருமையை உரைக்கும் போது,

கார்த்திகை விழாவினிற் கனமுரசங்க ளார்த்திடுமலை (9)

எனவும்,

மிடிதீர பவனோய்க ளணுகாமல் கார்த்திகை
விழாவினிற் தெரிசிப்பரே (58)

நோய் அணுகாது இருக்க கார்த்திகை விழாவின் போது தரிசிப்பர் எனவும் உரைப்பதைக் காணலாம்.

## புராணக் கதைகள்

எந்தவொரு நூலிலும் பாட்டுடைத் தலைவனைப் பற்றிய பல்வேறு பெருமைகளையும் உரைக்குமிடத்து, வழிவழியாக மரபாக வழங்கிவரும் கதைகளை — அவன் பெருமகளை விளக்கும் கதைகளைச் சொல்லாமல் அந்நூலின் ஆசிரியர்கள் செல்லமாட்டார்கள். அவ்வண்ணமே ஈண்டும் நூலாசிரியர் முருகப் பெருமானின் அருட்செயல்களை விளக்கும் பல் வேறு கதைகளை இலக்கியங்களிலும், புராணங்களிலும் வழங்குவன வற்றை — பெரும்பாலும் எல்லாப் பாடல்களிலுமே விளக்குகிறார். அவ் வகையில் இந்நூலுள் இடம்பெறும் புராணக் கதைகளை இருவகை யாகப் பிரிக்கலாம். ஒன்று; பாட்டுடைத் தலைவனாகிய முருகனைப் பற்றியது; மற்றொன்று பிற தெய்வங்களைப் பற்றியது. இக்கதைகள் எல்லோரும் அறிந்தமையால் ஈண்டு விளக்கமாகக் கூறாது குறிப்பாக அளிக்கப்பட்டுள்ளது.

## முருகனைப் பற்றிக் கூறுவன

1. சிவபெருமானின் நெற்றிக்கண்ணில் பிறந்தவன் (90)
2. பிரமனைச் சிறையிட்டது (11, 15, 82)
3. பிரணவ மந்திரத்தின் பொருள் உபதேசித்தது. (12, 15, 18, 86)
4. தேவர்கள் பொருட்டு, அசுரர்களுடன் போர்செய்து வென்றது.(3, 12, 13, 14, 15, 18, 34, 46, 59, 78, 86, 89, 90, 94, 98)
5. அகத்திய முனிவருக்கு அருளியது (13, 21, 45)
6. மயில் ஏறிவலம் வந்தது (15)

7. குன்றிலுறைந்தது (32)

8. வள்ளியை மணந்தது (51)

9. செட்டிப்பெண் காட்சி (64)

10. மகவான் மகளை மணந்தது (91)

11. ஆட்டுக்கிடாய் வாகனம் பெற்றது (105)

12. நக்கீர தேவனைக் காத்தது (108)

இக்கதைகளில் பல பாடல்களில் மீண்டும் மீண்டும் சொல்லப்பட்டு வருவது தேவர்கள் பொருட்டு சூரபத்மன், சிங்கமுகன், பானுகோபன் ஆகியோரை வென்று, பருவரையைப் பிளந்து, மாமரந்தடிந்தமையே எனலாம்.

## பிற தெய்வங்கள் பற்றியன

**1. சிவன்**

1. தாருகாவனத்தில் முனிபத்தினியர் திருவிளையாடல் (50)

2. முனிவர்கள் அனுப்பியகரியை உரித்துப் போர்த்தியது (33, 50)

3. அரவு பணிபூண்டது (33)

4. காலனை முனிந்து உதைத்தது (33)

5. திரிபுரம் எரித்தது (33)

6. பார்த்தனுக்குப் பாசுபதம் அளித்தது (68)

7. பிட்டுக்கு மண் சுமந்தது (108)

8. தக்கன் வேள்வியைத் தகர்த்தது (90)

9. மால் பிரமன் அறியாமை (88)

**2. உமையம்மை**

1. இருநாழி நெற்கொண்டு அறம் வளர்த்தது

2. சம்பந்தர்க்குப் பால்புகட்டியது (49)

3. அபிராமிப் பட்டர்க் கருளியது (39)

**3. விநாயகன்**

1. பாரதம் எழுதியது (11, 59)

2. அகத்திய முனிவரின் குண்டிகை கவிழ்த்தது (47)

4. திருமால்

1. கூனியை உண்டை வில்லால் அடித்தது (25)
2. உரல் ஏறி வெண்ணெய் உண்டு விளையாடியமை (44)
3. குருந்தேறி துகில் மறைத்தது (84)
4. கோசிகன் மகனைக் காத்தமை (85)

## சித்தாந்தக் கருத்துக்கள்

நூலின் பல இடங்களிலும் பல அரிய சித்தாந்தக் கருத்துகள் விளக்கப்பட்டுள்ளன. சிவலோகப் பதவியை அடைதல், யோக நிலை அமர்தல் போன்ற பல செய்திகள் கூறப்பெற்றுள்ளன. எனினும் இவை யாவும் ஆங்காங்கே பாடல் விளக்கவுரைப் பகுதிகளில் விளக்கியுள் ளமையால் ஈண்டும் அவற்றை விளக்கவில்லை. எனினும் அச்சொற் களைப் பட்டியலிட்டு அகரநிரலாக்கி 'சித்தாந்தச் சொற்கள்' எனப் பின்னிணைப்பில் (3) சேர்க்கப்பட்டுள்ளது.

## தன்னிரக்கமாக உரைத்தல்

இறையருளை உரையாமல், பலநாட்கள் வீணே அவலமாய்க் கழித் தேன்; என்னையும் போல் ஒரு அறிவற்றவன் உண்டோ? எனத் தன் அறியாமைக்கு வருந்தி உரைப்பதாய் உள்ளமையைப் பல பாடல்களில் காணமுடிகிறது. (5, 11, 14, 17, 18, 20, 21, 22, 23, 24, 26, 28, 31, 35, 40, 53, 54, 55, 57, 64, 75, 80, 81, 107) தன்னுடைய இழிந்த நிலைமையைத், தான் எவ்வாறு முருகனின் பெருமையை அறியாது, வீணான காயத்தை நம்பினேன் என்பதை கூறுவாராய்,

தத்துவப்பிர தானமா கியகாய மென்னவந்
　　தாய்க்கருவி ஒற்பவித்து
　　தசைக்குருதி நிணமூளை கீமயநரம் பென்புதோல்
　　சலமுலமு மிருணாத்தமாய்
　　பித்தமுறு வாயுவுடன் சயிந்தயமு மேலிட்டு
　　**பிணமாகு முடல்சுமந்தேன்** (22)

என்று பிணமாகும் உடல் சுமந்து வீணே கழித்தனன் எனத் தன் நிலை மைக்கு மிகவும் நொந்து உரைக்கின்றார்.

தானமறி யேன்செயுந் தர்மமறி யேனல்ல
சன்மார்க்க மானதறியேன்
தவமறி யேன்ஞான நிலையுமறி யேனூல்கள்
சற்றெணினு மோதவறியேன்
நாணிலமெ லாம்பரவு தெய்வதலங் கண்டறியேன்
நவநதிக ளாடியறியேன்
நல்லோ ருரைத்தமொழி கேட்டுமறி யேனுலகிற்
நல்வசன மோதவறியேன்
வானவரி றைஞ்சுமலர்ப் பதனென்று நின்னாம
**மனதினில் நினைக்கவறியேன்**
**மதியிலாக் கொடியேனை......** (35)

என மிகவும் இரங்கிக் கூறுகிறார்.

## விண்ணப்பமாக உரைப்பன

முருகப் பெருமானிடத்துக் கொண்டுள்ள அளவில்லாத பக்தியின் காரணமாக முருகனிடம் வேண்டும் வரங்கள் பலவாகும். தான் எத் துணைதான் அறியாமை உடையவனாக இருப்பினும், தன்னுடைய குறையை நீக்கி ஆட்கொள்ள வேண்டியது முருகனின் கடன் என்று உரைக்கின்றார். மேலும் தன் நாவானது முருகனைத் தவிர வேறு ஒருவரைப்பாடும் நிலை தனக்கு வரக்கூடாது எனவும், இதுபோல் இன்னும் பல வரங்களை விடுக்கின்றார். சில இடங்களில் பக்திப் பெருக்குடன் பயத்துடனும், சில இடங்களில் உரிமையுடன் கோபம் கொண்டு வினவுவதும் வியக்கத்தக்கது. *(5, 8, 11, 14, 17, 18, 19, 20, 21, 23, 24, 26, 27, 28, 29, 30, 32, 33, 35, 39, 50, 51, 55, 56, 58, 62, 66, 70, 73, 79, 82, 84, 89, 90, 91, 92, 93, 95, 96, 103, 104, 109)* பெரும்பாலும் எல்லாப் பாடல் களிலும் ஏதாவது ஒரு வரத்தினைக் கேட்பதைக் காணமுடிகிறது. பொது நிலையில் தன்னை அவனுடைய திருவடிகளில் ஆட்கொள்ளும்படி,

**அடியேனை உன்னிடக் கோகனத் தாளிலாள்வாய்** (11)

**தயாபரா யெனையாளுவாய்** (14)

**கொடியேனை யாள்வதுளதோ** (17)

எனப்புலவாறு வேண்டுகின்றார்.

இனி உரிமையுடன் கோபமாக,

வருந்தினான் முறையிட்டு கூப்பிட் டழைப்பது
மணிசெவியிற் கேட்டிடாதோ
வந்த்ஞ் சலஞ்சலஎன் றென்றுமொழி தந்திடில்
**வாய்முத்து திர்ந்துவிடுமோ**
மருந்தினிற் கினிதான மதுரமொழி இறவரிட
**மாதுநகை புரிகுவாளோ**
மகவோ னளித்ததெம் வானையாள் செவ்வாம்பல் (84)
வாய்முத் தமீந்திடாளோ
வாய்திறந் தொருவர மளித்திடிற்
**தந்தைபொருள் குறைவுவராது** (107)

என ஆத்திரத்துடன் 'என்னுடன் பேசின்வாயில் இருக்கும் முத்து உதிர்ந்துவிழும் எனப் பயப்படுகின்றாயா? இல்லை உன் பெண்டாட்டி வள்ளியும் தெய்வானையும் உன்னைக் கிண்டல் செய்து சிரிப்பார்கள் என்ற பயமா? இல்லை உங்க அப்பன் வீட்டுச் சொத்து குறைந்து போய் விடும் என்ற பயமா?' என நெருக்கத்துடன் — உரிமையுடன் கேட்பதைக் காணமுடிகிறது. இவை இவருடைய முருக பக்தியையும் ஆற்றாமை யையும் வெளிப்படுத்துவதைக் காணலாம்.

## பேறுபெற்றமை உரைத்தல்

இறைவனிடத்துள்ள பக்தியால் அவனிடம் தன்னுடைய அறியாமை களைக் கூறி அவற்றைப் போக்கித் தன்னை யாண்டுகொள்ள வேண்டும் என வேண்டிப் பாடியவர், தன் வேண்டுகோட்கு இணங்கித் தனக்கு முருகப் பெருமான் அருள்செய்ததையும் பலபாடல்களில் விளங்க உரைத்துள்ளமையைக் காணமுடிகிறது. (3, 4, 7, 8, 19, 22, 25, 36, 54, 57, 62, 69, 104, 108, 110)

ஆத்தாத பிறவிநோய் கொள்ளுமடி யேன்றனை
அஞ்சலென் றருகழைத்து
அசையாம லிருமென்று சிரமீது கரமிட்டு
அள்ளிவெண் ணீற்றையிட்டுச்
சாத்தாதே சாத்துமொழி சாத்தியிட பிங்கலைத்
தம்பித்து யிருப்பார்வையுஞ்
சமமாக சுழியாகு மளைமீதில் நாட்டியே
சஞ்சல மெலாமகற்றி (69)

## அறிவுரைகள்

இலக்கியங்கள் பொதுவாக அதன் நுவல்பொருள் எதுவாக இருப்பினும் இடையிடையே பல கருத்துகளை — நீதி — நிலையாமைக் கருத்துகள் ஆகியவற்றை எப்படியாவது சேர்த்துச் சொல்லிச் செல்லும் இயல்பைப் பெற்றுள்ளன. அவ்வகையில் சதக இலக்கியங்கள் பழமொழி, உவமை போன்றவற்றின் வாயிலாக உலக இயல்புகளையும் விளக்கிச் சென்று இலக்கிய உலகில் தனக்கெனவொரு தனியிடத்தைப் பெற்றுத் திகழ்கின்றன எனில் அது மிகையாகாது. அவ்வகையில் இந்நூல் பெரும்பாலும் முருகப் பெருமானைப் பற்றியே உரைத்துச் சென்றாலும் ஒருசில இடங்களில் நிலையாமை போன்ற சில அறிவுரைகளைக் கூறிச் செல்வதைக் காணமுடிகிறது. நூல் துதி நூலாக இருப்பதால் ஒருசில பாடல்களிலேயே இதனைக் காணமுடிகிறது. (22, 38)

மண், பொன், பெண் ஆகிய மூவகை ஆசைகளால் அழியும் மனிதனை மிகவும் இழிவுபடுத்துவது பெண்ணாசையாகையால், அப்பெண்ணாசையை ஒழிக்கும் முகத்தான் பரத்தையர் இழிபை, விளக்கமாகக் கூறுகிறார்.

பூசுவார்கள் மஞ்சளைப் புனைகுவார் துயில்களை
    பூட்டுவார் பணிகள்குழலில்
    பூக்களைச் சூட்டுவார் காட்டுவார் மையலைப்
    புருடராய் வந்தபேர்க்கு
ஆசையாய் காட்டுவா ரட்டியில் லாலே
    யறைவீட்டி லேயழைப்பார்
    அனபாக மலரணை மீதினிலி ருத்துவார்
    அனைத்துயித மூறல்தருவார்
காசெலாம் கொள்ளையாய் கொள்ளுவா எல்லாமை
    கண்டால் முனிந்துவிடுவார்
    கடையான வேசியர் மாய்கை (92)

## அடியார்கள் பெருமை

ஆண்டவனைவிட ஆண்டவனின் அடியாருக்கு உள்ள பெருமை அளவிடற்கரியது. இறையடியார்களுக்காக எதையும் செய்யத் துணிந்த இயற்பகையார், சிறுத்தொண்டர் ஆகியோருடைய வாழ்வு இறையடியவர்களின் பெருமையையும், அவர்களுக்கு இறைவன் பாலிருந்த பக்தியையும் விளக்கும். நூலாசிரியரும் அடியார்கள்தம் பெருமையைப் பல

பாடல்களில் குறிப்பிட்டுச் செல்கின்றார். இறைவன் அருள்பெற்ற சில அடியவர்களையும் குறிப்பிட்டுச் செல்கிறார்.

1. அபிராமிபட்டர் (59)
2. அருணகிரிநாதர் (17, 30)
3. கும்பமுனி (45, 75)
4. கோரக்கநாதர் (75)
5. தமிழ்ஞான சம்பந்தன் (49)
6. நக்கீரர் (17, 108)
7. பார்த்தன் (68)

போன்ற இறையடியார்கள் பெற்ற அனுபவங்களை உரைப்பதுடன், அடியார்கள் என்றால் எவ்வாறு இருப்பார்கள் என்பதை—அடியார் வருக்கம் அடியார் மனவுறுதி போன்ற பகுதிகளால் விளக்கிச் செல்கின்றார். சம்பந்தர் பால் உண்ட வரலாற்றை உரைக்கும்போது,

உண்மைபெறும் வாறுதமிழ் வேதமது வோதவறு
ஒப்பிலா ஞானவொளியே (49)

என சம்பந்தர் வேறு முருகப் பெருமான் வேறு என எண்ணாமல், முருகப் பெருமானின் அவதாரமே சம்பந்தர் என்ற எண்ணத்துடன் பாடுவதை அறியலாம். இனி பொதுவாக அடியார்கள் தம் பெருமையினை உரைக்கும் போது பற்றறுத்தார்க்கு எப்பற்றும் இல்லை என்பதையும், இறையடியார் எவர்க்கும் அஞ்சார் என்பதையும் அழகுடன் விளக்கிச் செல்வார்.

வீடேது விலையேது குலமேது நலமேது
விதியேது மதியுமேது
வினையேது மலமுமேது தவமேது சிவமேது
மெய்யுடனே பொய்யுமேது
மாடேது கன்றேது மண்ணேது பொன்னேது
மக்களொடு சுற்றமேது
மனையாட்டி சுகமேது மயலேது துயரேது
வளராசை யென்பதேது
பாடேது பயமேது நரகேது கதியேது
பலசாத்தி ரங்களேது
பலனேக விரகமேது சிஞான மாகியே
பற்றற் றிருப்பவர்க்கு (52)

எனப் பற்றற்றவருக்கு ஒரு பற்றும் இல்லையெனவும், இறையடியவர்கள் எவர்க்கும் அஞ்சார் என்பதை,

படியாளு மன்னருக் கஞ்சார்க ளறிவிலாப்
பாதகர் தமக்குமஞ்சார்
பல்லுயிரைக் கொல்லுவோற் கஞ்சார்க ளறிவிலாப்
பாம்புக்குச் சற்றுமஞ்சார்
மிடியாளர் கொலையாளர் கொடுமைக்கு மஞ்சார்கள்
விண்ணுறு மிடிக்குமஞ்சார்
விதிதனக் கஞ்சார்கள் அந்தகன் வரவிடும்
வெய்யதூ தற்குமஞ்சார்
அடியார்க ளொருவருக் கஞ்சார்கள்......... (78)

எனவும் திறம்பட உரைப்பர். இவருரைக்கும் அடியார்கள் பெருமைக்குச் சான்றாய் விளங்கியவர்கள் நம் சைவ நாயன்மார்கள் எனலாம். அதிலும் திருநாவுக்கரசரையும் மார்க்கண்டேயே நாயனாரையும் இதற்குச் சிறந்த உதாரணமாகக் கூறலாம்.

## துட்டர் இழிவு

ஆசிரியர் அடியார் பெருமையினை உரைத்தது போலவே துன்மார்க்க நடத்தை உள்ளவர் இயல்பினையும், அவர்கள் பெறும் பேற்றினையும் ஒரு சில பாடல்களில் உரைத்துச் செல்கின்றார்.

சூதான வார்த்தையுங் குலைகளவு செய்வதுந்
தோதகங் களைச்செய்வதுந்
துணிவாகி பிறருடைய பொருள்கவர்ந் திடுவதுந்
துன்பமிக விளைவிப்பதும்
மாதாபி தாகுரு தெய்வமென் றெண்ணாமல்
மதமாகியே யிகழ்வதும்
மன்னர்குரு சாமிக்கு துரோகம் நினைவதுகற்பு
மங்கையரை நிந்திப்பதும்
சாதிநெறி தனைமீறி சங்கையில் லாமலே
தசைபுலால் கள்ளுண்பதுந்
சத்தியமிவை யித்தகைமை யுற்றபேர் ரந்தகன்
தன்பதியிலடை வதுகண்டாய் (42)

என துட்டர் இயல்பையும், துட்டர்கள் பெறும் பேற்றையும் இப்பாடலிலும் இதுபோல் வேறுசில பாடல்களிலும் உரைக்கின்றார்.

## மொழிநடை

உவமை, உருவகம் போன்றவற்றின் வாயிலாகவும், சொல்லாட்சி போன்றவற்றின் வாயிலாகவும் இவருடைய மொழிநடைய உணர முடிகிறது. வடசொல்லாட்சி நிறைய இடம்பெற்றுள்ளது. ஒருசில இடங்களில் பேச்சு வழக்கில் வழங்கும் சிலவற்றைக் கூறியிருப்பதைக் காண முடிகிறது. சில இடங்களில் எதுகை, மோனைக்கு ஏற்ப சொற்களைக் கையாளும் திறன் காணப்படுகின்றது.

### உவமை

அரிய பல உவமைகளைக் கூறி பல அரிய கருத்துக்களை விளக்கிச் சென்றுள்ளார். ஒரே கருத்தை விளக்கப் பல உவமைகளைக் கையாண்டுள்ளதையும் காண்கிறோம். உவமை அனைத்தும் அகர நிரலாக்கிப் பின்னிணைப்பில் (8) தரப்பெற்றுள்ளன.
வடசொல்லை மிகுதியாகக் கையாண்டுள்ளார். சில பின்வருமாறு.

| | | | |
|---|---|---|---|
| அதபின் | (33) | சஞ்சிதம் | (7) |
| அபயம் | (80, 105 | சாட்டாட்சரம் | (13) |
| ஆமலகம் | (67) | சதம் | (16, 26) |
| ஆனந்தரூபம் | (75) | சம்பத்து | (101) |
| உற்பவித்து | (31) | சயிலம் | (4) |
| உற்பவம் | (25) | சிலாக்கியம் | (8) |
| உறுமிரம் | (48) | சின்மயம் | (51) |
| ஏகாந்தம் | (27) | சுவாதிட்டானம் | (113) |
| கலாபம் | (61) | தத்துவாதீதம் | (91) |
| கனகம் | (40) | தயாபரன் | (14) |
| கனதனம் | (3, 48) | தாரகப்பிரமம் | (51) |
| குங்குமப் பயோதரம் (11,26) | | திமிரம் | (2) |
| | | துன்மார்க்கன் | (26) |
| கும்பம் | (28, 56) | துர்ச்சனர் | (78) |
| கும்பகெஜர் | (36) | துவாதீதம் | (29) |
| கூபம் | (83) | | |

எதுகை, மோனைக்கு ஏற்ப சில இடங்களில் சொற்கள் அமைந்துள்ளன. சான்றாக குன்று எனவரும் இடத்தில் எதுகைக்கு ஏற்ப, குண்ணு என வழங்கி இருத்தலை,

வெண்ணீறு, கண்ணீர், தண்ணீர் என்பதற்கு ஏற்ப,
குண்ணேறி வைகிய (32)

எனவும், விண்ணவர், கண்ணும், பெண்ணமுதம் என்பதற்கு ஏற்ப,

குண்ணனைய கொங்கையாள் (40)

எனவும் உரைத்துச் செல்வதைக் காணலாம். இதுபோல் பல இடங்களில் காணப்படுகின்றன.

சில இடங்களில் பேச்சு வழக்கில் வழங்கும் சில தொடர்களைக் கையாண்டுள்ளார். காதில் விழவில்லையா? எனக் கேட்பதை,

மணிசெவியிற் கேட்டிடாதோ (84)

எனவும், வாய்திறந்து பேசினால் என்ன முத்தா உதிர்ந்துவிடும்' என்று கூறுவதை,

வாய்முத்துதிர்ந்து விடுமோ (84)

எனவும், 'நான் கேட்டதற்குப் பதில் சொன்னால் உன் அப்பன் வீட்டுச் சொத்து பறிபோகுதோ' என்று கேட்பதை,

வாய்திறந் தொருவர மளித்திடிற்
த்ந்தைபொருள் குறைவுவராது (107)

எனவும் நயம்பட உரைத்திருப்பதைக் காணலாம்

## சக்தியர் இருவரைக் குறிக்கும் சொற்கள்

எயினர் குல மங்கை (33)
கன்னியர் (47
கானக்குறமாது (14)
கும்பமுலைவள்ளி (20, 27)
குலமங்கை (33)
குலிசன்மகள் (110)
குவளைவிழிமாது (13)
குறமங்கை (17, 21, 34, 34, 50, 71)
குறமாது (14, 24, 39, 40, 49)
குறவள்ளி (36)
கோதை (102)
சயிலமயிற்சாயாலாள் (87)
தெய்வானை (12, 13, 16, 20, 30, 33, 34, 40, 58, 66, 74)
தேன்மொழிவள்ளி (3)
பெண்ணமுதம் (40)
வள்ளி (3, 15, 16, 18, 19, 20, 24, 30, 42, 58, 60, 62, 66, 72, 74, 79)
வாளரக்குறமங்கை (34)

### பிறதெய்வங்கள்

முருகப் பெருமானைப் பாட்டுடைத் தலைவனாகப் பெற்றிருப்பினும் வேறுபல தெய்வங்களைப் பற்றிய குறிப்பும் காணப்படுகின்றது. சிவன், உமையம்மை, திருமால், பிரம்மன், கணபதி, சூரியன், சந்திரன், ரதி, மன்மதன், பைரவர், காளி, துர்க்கை போன்ற பல தெய்வங்களைப் பற்றிய குறிப்பும் காணப்படுகிறது. (பின்னிணைப்பு-4) எனினும் இத் தெய்வங்களைப் பற்றிய குறிப்புகள் பாட்டுடைத் தலைவர்க்குப் பெருமை சேர்க்கும் வகையிலேயே அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

### அசுரர்களைக் குறிக்கும் பெயர்கள்

முருகப்பெருமானுடன் போரிட்டு தோற்ற அசுரர்களைக் குறிக்கும் பெயர்களும், சொற்களும் நூலில் பலவிடத்தே காணப்படுகின்றன. அவை

அசுரர் (13, 17, 46, 86, 104), அரிமுகன் (16), அவுணர் (86, 94), ஆளிமுகமாசுரர் (93), ஆனைமுகன் (94), குஞ்சர முகன் (74), கொடிதான சூரன் (78), சிங்கமுகன் (106), தாருக சுரன் (16, 73, 106), சூர் (80, 91), சூர் இருக்கை (98), சூரர் (83), சூரர்குலம் (83), சூரபத்மன் (34), சூரன் (12, 14, 16, 98), பானுகோபன் (16) என்பனவாம்.

### படைக்கலன் பெயர்கள்

முருகப் பெருமானும், பிறதெய்வங்களும் பயன்படுத்திய படைக் கலன்கள் பெயர்கள் காணப்படுகின்றன. அவை; அங்குசபாசம் (11) அயில் (13, 66, 82), கந்தாயுதம் (59), சிலை (33, 36), தமருகம் (50), திரிசூலம் (104), பாசுபதம் (68) மழு (50, 74, 86, 91, 104), வாள் (105), வேல் (9, 12, 14, 16, 17, 18, 39, 40, 43)

### உறவுப் பெயர்கள்

அப்பன் (59), அன்னை (59), இளையவன் (14), கணவன் (14, 33, 64), குமாரன் (46, 56, 81), குழந்தை (32, 77, 90), குழவி (38, 48), சிறுமதனை (41), தங்கை (95), தம்பி (13, 36, 47, 58), தாய் (22, 31, 38, 81, 109), பிள்ளை (81), மகள் (3, 5), மகன் (80), மருகன் (17, 18, 23, 44, 46, 79, 80, 84), மைத்துனன் (13), மைந்தன் (16, 35).

## மணிவகைகளின் பெயர்கள்

மணி (101), செம்பவழம் (36, 56), செம்பொன் (106), தரளம் (36, 46), பொன் (22, 24, 52, 57, 65)

## அணிகலன் பெயர்கள்

குழை (19, 49), கோத்தமணிமாலை (101), தண்டராமாலை (46), தண்டுளபமாலை (105), மணிமாலை (37).

## நோயைக் குறிக்கும் சொற்கள்

நலியானபிணி (38), பசிப்பிணி (41), பவனோய் (9, 45, 50, 58), பிணி, (38, 73, 77, 79), பித்தம் (22), பிறவினோய் (62, 69), வல்பிணி (65).

## பிறகுறிப்புகள்

தாவரச் செய்திகள், விலங்குப் பெயர்கள், இடப்பெயர்கள் போன்ற பிறசெய்திகள் பின்னிணைப்பில் (5, 6, 7) சேர்க்கப்பட்டுள்ளன. இப் பெயர்கள் எல்லாமே இவற்றுக்குரிய அடைச்சொற்களுடன் கொடுக்கப் பட்டுள்ளன.

## குமர சதகமும் குமரேச சதகமும்

முருகன் பேரில் இயற்றப்பட்டு வெளிவந்துள்ள சதகமே குமரேச சதகம். இச்சதகம் 'திருப்புல்வயல்' என்னும் ஊரில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமான் மீது 'குருபாத தாசர்' என்பவரால் இயற்றப்பட்டது. காப்புச் செய்யுள், அவையடக்கம் இவற்றுடன் 102 பாடல்களை உடையது. முருகனைப் பற்றிய துதி நூலாக அமையினும் இச்சதகம், சிவகிரி குமர சதகத்தினின்றும் வேறுபட்டுக் காணப்படுகின்றது. முருக னின் பல்வேறு திருவிளையாடல்களை விளக்கி உரைப்பதில் இவ்விரு சதகமும் ஒத்துக் காணப்படினும், பிற கருத்துக்களை உரைப்பதில் வேற்றுமை காணப்படுகிறது.

குமர சதகமாகிய இந்நூல் முருகன் துதியையும், அவனுடைய அருட் செயல்களையும் விளக்குவதையே பெரும்பாலும் கொண்டுள்ளது. சிறு பான்மையே வேறு செய்திகளை, அதாவது உலக நிலையாமை, உடல் நிலையாமை, வேசியர் இழிவு, பிறவித்துன்பம் போன்ற செய்திகளை எடுத்துரைக்கிறது. ஆனால் இதற்கு மாறாக குமரேச சதகம் முருகன்

திருவிளையாடல்களை உரைப்பதுடன் நால்வகை வருணத்தார்கள் இயல்பு, பிதாக்களின் இயல்பு, யார்க்கு யார் தெய்வம், ஒன்றை ஒன்றை மாற்றி இருப்பவை, இவர்க்கு இதில் நிறைவு, இவர்க்கு இது இல்லை, இப்படிப்பட்டவர் இவர், விரைந்து அடக்கவேண்டியவை, துரும்பாகும் செயல்கள், பிறப்பினால் வருவது, பலர்க்கும் பயன்படுவன, நரகில் வீழ்வன, சிறப்பில்லாதவை, ஆகாப்பகை, வசையுறும் பேய், இனத்தில் உயர்ந்தவை, வலிமை, இருந்தும் பயனில்லாதவை, மக்களுள் பதராவார், நோய்க்கு வழியானவை, இறந்தும் இறவாதவர், இருந்தும் இறந்தவர், பயன் அற்றவர், ஈயாதவர் இயல்பு, திருமகள் வாழுமிடம், மூதேவி வாழுமிடம், மாறாதது, மக்களில் விலங்குகளாவார், அற்பர் வாழ்வு நல்லினம் சேர்தல், ஊழின் பெருமை, இறுமாப்பு, நட்பு, பயன் தருவன, காலத்தில் உதவாதவை, தீச்சார்பு, வேசையரிழிபு, உற்ற கடமை, கலி காலக் கொடுமை, செயத்தகாத்வை, நடுவுநிலைமை அளக்க இயலாதவை, காலம், இடம் அறிதல், யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, வறுமையின் கொடுமை, நிலையற்றவை, செய்யு ளின் இயல், திருநீறு வாங்கும், அணியும் முறை, பயனற்ற உறுப்புக்கள், கைவிடத் தகாதவர், தகாத செயல்கள், சான்றோர் தன்மை, தக்கவையும் தகாதவையும் என இவ்வாறு நூலில் உலக வாழ்க்கையில் அறிந்து நடக்க வேண்டிய பல்வேறு முறைகள் பற்றி விளக்கி உரைத்துள்ளார்.

# அடிக்குறிப்புகள்

1. சதக இலக்கியம், ப. 10.
2. மேற்படி நூல், ப. 13.
3. திராவிடமொழி இலக்கியங்கள், ப. 194.
4. மேற்படி நூல், பக். 194-95.
5. திராவிட மொழி இலக்கியங்கள், பக். 195-96.
6. மேற்படி நூல், ப. 197.
7. திராவிடமொழி இலக்கியங்கள், பக். 196
8. மேற்படி நூல் பக். 198-99.
9. இலக்கண விளக்கம், நூற்பா, 847.
10. பிரபந்ததீபம், நூற்பா, 81.
11. முத்துவீரியம் நூற்பா, 156.
12. சுவாமிநாதம், நூற்பா, 168.
13. சதக இலக்கியங்கள், ப. 16.
14. நன்னூல் நூற்பா, 49.
15. அகநானூறு, பா. 35.
16. ஊஞ்சல் இலக்கியம், ப. 136.
17. கலைக்களஞ்சியம், தொகுதி 5, ப. 738.
18. கோவல் ஆதீனக் குருமணி (வரலாறு) ப. 21.
19. அவிநாசிநாதர் தோத்திரக்கொத்து, நெஞ்சுவிடுதூது, பா 256-61.
20. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா. 5.
21. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா 63.
22. குறுந்தொகை, பா. கடவுள்வாழ்த்து.
23. மேற்படி நூல், பா. 1.
24. ஐங்குறுநூறு, பா. 245.
25. பதிற்றுப்பத்து, பா. 11.
26. பரிபாடல், பா.51-10.
27. அகநானூறு, பா 22.

28-30. அகநானூறு, பா, 120, 39, 149.

31-34. புறநானூறு, பா. 14, 16, 23, 259.

35. கலித்தொகை, பா. 27, 83.
36. கலித்தொகை, பா. 83.
37. மதுரைக் காஞ்சி, 262-3.
38. பட்டினப்பாலை 154-58.
39. மலைபடுகடாம், 318-322.
40. சூடாமணி நிகண்டு, நூற்பா, 23.

# சிவகிரி குமர சதகம்

## காப்பு

1. சீர்மருவு நல்ல சிவகிரியில் வாழ்முருகன்
பேர்மருவு மிச்சதகம் பேசுதற்கு — நீர்மருவுஞ்
செஞ்சடையா னீன்றருளுஞ் செந்தா மரைக்கரங்க
ளஞ்சுடையான் சேவடிக்காப் பாமே. (1)

2. திமிரமகல் மெஞ்ஞான தேசிகன்மேற் செந்தமிழாற்
குமர சதகமொன்று கூற — அமரர்புகழ்
அஞ்சிரத்தா னன்றளித்த அம்புயத்தான் ஐங்கரத்தான்
கஞ்சனத்தாட் குஞ்சரத்தான் காப்பு. (2)

காப்புத் துதி முற்றும்

சிவகிரி குமர சதகம் — பஞ்ச ரத்தினம்

சிவம்

## பன்னிருசீர்ச் சந்தவிருத்தம்

3. பூவுறை யுந்திரு மாமக ளைத்திரு மார்பில்பு தைத்தவனும்
புண்டரீ கத்தய னும்பணி பாதலர் பூதலர் மாதவரும்
காவுறை மீதில மேவிய விந்திரன் கடவுளர் மாமுனிவர்
கைதொழு தேற்றுவர் நின்திருக் கோயிலைக்
கண்டுவ லம்வருவார்
சேவுறை நாதனு மீன்ற சிகாமணி தேன்மொழி வள்ளிமகிழ்
திண்புய னேவயி லேந்தியவி விக்கிரம செந்திலு றைந்தவனே
தேவரைக் காத்தவ னேயெனை யாளுடை தேசிக தேசிகனே
சிவகிரி வேலவ னேமுரு காவென தீவினை நீங்கிடுமே (1)

## எண்சீர் விருத்தம்

4. திருமுகளங்க ளோராறுஞ் சயிலம் போன்ற
திண்டோள்கள் பனிரெண்டுஞ் செங்கை வேலுங்
கருணைகுடி கொண்டகண்கள் விளங்க மார்பிற்
கடப்பமலர் மாலைதனைக் கரந்து தூயக்
குருவடிவாய் சண்முகமாய் அடியா ருய்யக்
குவலையமெல் லாந்தழைக்க கோவல் மேவி
ஒருமொழியை யுதவிபர கதியை நல்கும்
ஒப்பிலாச் சிவஞான யோகத் தானே. (2)

5. நன்மொழியா லுன்பெருமை புகல்வ தற்கு
நாமகளுக் கெளிதாமோ நாயேன் சொன்ன
புன்மொழியை யிகழாமல் நலமாய்க் கொண்டு
பொறுப்பதுவே கடனன்றோ பூவை கிள்ளை
தன்மொழியல் லாதொருவ ருரைத்த சொல்லை
சாற்றியது போலவிந்தச் சதக நூறும்
யென்மொழியைக் கேட்டுவரங் கேற்றிக் கொண்ட
யென்குருவே சண்முகமா மிறையே போற்றி. (3)

## சிவகிரி தோத்திரம் — பாதரசம்

### பன்னிருசீர் விருத்தம்

6. திருவளர் கோவலுறை ஆறுமுக மெஞ்ஞான
தேசிகனும் வீற்றிருந்து
சிவஞான நிட்டையி லுறைந்தமலை யல்லாது
தேவர்முதல் முனிவரேத்திச்
சிரமீது நற்கரங் கொண்டுபணி கின்றமலை
சிவசண்மு கத்தேசிகன்
செங்கரங் கூப்பித்தொழு தேத்துமலை யன்பர்கள்
தினந்தினங் கைதொழுமலை
மருள்கண்ட மாதவன் முதலாய சிவயோக
மாதவத் தோர்பணிமலை
வையகத் தோர்கள் புகழ்கின்றமலை யனைவோரை
வாழ்விக்க வந்தருள்மலை
கருணைகுடி கொண்டமலை அடியாரைக் காக்குமலை
கருதுவர மீய்ந்தருள்மலை
கயிலைமலை நிகரொத்த மயிலேறு சேவகன்
கந்தருறை சிவமலையதே. (1)

7. பஞ்சபா தகமெலா மொழிக்குமலை யன்பாகப்
பணிவோ ரிடத்துயரெலாம்
பறிக்குமலை பாவலர் புகழ்ந்துபணி கின்றமலை
பாருலகெ லாந்தழைக்க
அஞ்சலென வந்தமலை ஆனந்த மாகுமலை
அரிபிரமர் முனிவர்முதலாய்
அனுதினமும் வலமாக வந்துபணி கின்றமலை
அருந்தவர்கள் வாழ்ந்தருள்மலை

சஞ்சித மலத்தையும் நீறாக்கு மாமலை
சச்சிதா னந்தகுருவாய்
தாரணியி லெய்தியடி யார்கள்பவ மகலவே
தாளிணையி லாண்டருள்மலை
கஞ்சமலர் பூத்தசுனை மேவுமலை யுச்சியிற்
கதிர்பெரு விளக்கிடுமலை
கயிலைமலை நிகரொத்த மயிலேறு சேவகன்
கந்தருறை சிவமலையதே. (2)

8. சந்ததமு மடியார்கள் சிந்தைதனி லுன்னுமலை
தாரணியை யாளுநிருபர்
சலசமலர் நற்கரங் கொண்டுபணி கின்றமலை
சாத்திரமு ழங்கிடுமலை
சிந்தைதுயர் நீக்குமலை சேணுலா வியமலை
சிறுமைதனை தீர்த்திடுமலை
தீவினை யகற்றுமலை தேவர்புகழ் கின்றமலை
சிலாக்கியம் பெற்றருள்மலை
தந்தியொடு கரடிபுலி வாழுமலை நீடுமலை
தாங்குமலை பாங்குபெறவே
சரணென் றடைந்தவர் பிறவிதுயர் தீர்க்குமலை
சங்கமர்கள் வாழ்ந்திடுமலை
கந்தமலர் வாவிபுடை சூழ்மலை யெந்தனைக்
கருணையுட னாண்டருள்மலை
கயிலைமலை நிகரொத்த மயிலேறு சேவகன்
கந்தருறை சிவமலையதே. (3)

9. அண்டர்புகழ் கின்றமலை யண்ணாம லைக்குநிக
ரானமலை யொன்றுமில்லை
அந்தமலை குணபா லமர்ந்தமலை செஞ்சிமலை
யாகுமதன் தென்பாலிலே
தொண்டர்பணி கின்றமலை தண்டலைகள் சூழ்மலை
சோதிமலை யாகிவளருந்
தூயமலை மாமயில்கள் மேயுமலை ஞானமலை
சுந்தரநி றைந்திடுமலை
பண்டுவினை நீக்குமலை அண்டினரை காக்குமலை
பரகதி யளித்திடுமலை
பாருலகி லுற்றமலை ஞானமருள் கின்றமலை
பண்புமலை நண்பினுடனே

கண்டுதொழு தேத்துமலை கார்த்திகை விழாவினிற்
கனமுரசங் களார்த்திடுமலை
கயிலைமலை நிகரொத்த மயிலேறு சேவகன்
கந்தருறை சிவமலையதே. 4

10. முத்திதந் தருளுமலை முனிவோர் குழாத்துடன்
மொய்க்குமலை யன்பிலாரை
முனியுமலை பவநோய்கள் தீர்க்குமலை கேட்டவர்
முதவுமலை யதிலேவாழும்
நித்தியா னந்தபத முத்தசிவ பத்தரதி
நேமமுடன் பூசைசெய்து
நீங்காமல் துதிசெய்ய மகிழுமலை உலகினில்
நிகரொன்று மில்லாமலை
சித்திதந் தருளுமலை சித்தரா மையனைத்
திருவடியி லாண்டருள்மலை
சிவஞான வமுதுண்ணு மகாலிங்க மூர்த்தியருள்
சேவிக்க வாழ்ந்திடுமலை
தந்தவர்கள் கைதொழுது யேத்துமலை யித்துதியைக்
கற்றோரைக் காத்திடுமலை
கயிலைமலை நிகரொத்த மயிலேறு சேவகன்
கந்தருறை சிவமலையதே. (5)

## நூல்

### வினாயகர் பெருமை

11. அங்குசப் பாசமது யேந்துவா னெழுதாத
அருமறைக ளோதுமுனிவன்
அன்றந்த பாரதந் தனையெடுத்து ஒருகோட்டி
னால்ஆடகப் பொருப்பேடதாச்
செங்கையிலே வைத்தெழுது தந்திமுக னுக்கிளைய
சிவசுப்பிர மணியதேவா
செங்கமலக் கண்ணினாய் பங்கயன் சிரத்தினிற்
திருக்கரத்தால் புடைத்தெழு
குங்குமப் பயோதரக் குறமங்கை பங்கனே
குப்பய்யன் சிந்தைதனிலே
குடிகொண்ட தெய்வமே அடியேனை வுன்னிடக்
கோகனத் தாளிலாள்வாய்

கொங்கவிழ் மலர்மாலை யணிகின்ற மார்பனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (1)

## சிவகிரி பேரில் குமர சதகம்

## தெய்வத்தின் பெருமை கூறியது

12. பூமேவு சரவணப் பொய்கையி லுதித்தரன்
புனிதத்திருச் செவிதனிற்
போதனை யுரைத்தும் வேதமுத லாகம
புராணமிக துதிசெய்வதும்
தேமேவு மலர்கடப் பந்தா ரணிந்துந்
செங்கையிலே வேல்புனைந்ததுந்
தேவர்சிறை மீட்டதுஞ் சூரனைக் காய்ந்ததுந்
தெய்வானையைப் புணர்ந்ததும்
பாமேவு செந்தமிழ்க் கவிவாண ரேத்தவும்
பலகலையுணர்ந் தபெரியோர்
பரமென்று போற்றவும் உலகங்க வீடேற
பாரிலுயர் கிரிமேவியே
கோமேவு தரணியோர்க் கருள்பொழியு மேகமே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (1)

## நாமத்துதி

13. தவமுனிவ ரேத்துகுரு முனிவனுக் கருளிய
தத்துவாதீதப் பொருளை
சண்முக சடாட்சரக் காலகா லன்றருந்
தனையனேமயில் வாகனா
கவளமத யானைமுகன் றம்பியே அம்பிகை
கனதனப் பாலுண்டவா
கங்கைதரு புத்திரா காமவேள் மைத்துனா
கார்த்கே யாதடம்பா
அவனிமுத லீரேழு லோகந் தழைக்கவே
அயிலினாலிரு கூறுசெய்
அசுரர்குல காலனே அம்புயப் பதத்தனே
அமராபதித் தலைவனே

குவளைவிழி மாதுதெய் வானைமண வாளனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (2)

## தேவர்கள் துதி

14. இந்திரன் முதலான வெண்டிசைத் தலைவரு
மிமையவரு மால்பிரமனும்
யிரவிமதி வுரகர்வயி ரவர்முனிவர் விஞ்சைய
ரிருபாலு கந்துபணிய
கந்தனே குமரனே காமனேர் வடிவனே
கானக்குற மாதுதன்
கணவமுரு பரவரையை யிருபிளவு செய்தவேற்
கையனேதுய் யமணியே
தந்திமுக னுக்கிளைய செந்தியி லமர்த்திடுஞ்
சண்முகா வென்றேத்தியே
தன்னடியர் துயர்நீக்கி உன்னுவர மீய்ந்தருள்
தயாபரா யெனையாளுவாய்
கொந்தவிழு மலர்ச்சோலை வாவிவயல் சூழ்திருக்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (3)

## புனத்தில் வள்ளியைக் கூடினது

15. மரகதஞ் சிறந்தமெய் மலைமகளை யொருபாகம்
வைத்தசிவன் கைக்கனியே
மயில்மீதி லேறியே வுலகங்க ளீரேழும்
வலமாக வந்தகுகனே
பரவசம தாகவே நாரத னுரைத்திட
பாவைமேல் மயலாகியே
பார்தனில் வள்ளிமலைச் சாரல்புனந் தேடியே
பைந்தொடியைக் கண்டுமனது
உருகிமர மாகி நிழல்தந்து தினைமாவினை
நுகர்ந்துயித மூறலுண்டு
ஒருவரறி யாமலே கூடிவிளை யாடிய
வுன்மகிமை யாரறிவரோ

குருவாகி சிவனுக்கு செவியிலுரை செய்தவா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே (4)

## சூரன் பிரதாபம்

16. சதுமுகன் விதித்திடும் யீரேழு லோகமுஞ்
சாத்திரத்தெட் டண்டமுஞ்
சதமெட்டு யுகமிந்திர ஞான ரதமேறியே
தானவர்கள் போற்றிசெய்ய
மதுமலர்க் கற்பகத் தருநிழலில் வாழ்பவன்
மைந்தனைச் சிறையிலிட்டு
மாலயனு முனிவர்களு மேவல்பணி செய்யவே
வையகமெ லாம்புரந்த
யெதிரிலாச் சூரனை யிமைப்பொழுதில் வேலினா
லிருபிள்வு செய்தரிமுகன்
யெதுத்ததா ருகசூர பானுகோப னைவென்று
யிமையவரைக் காத்தளித்தாய்
குதலைமொழி வள்ளிதெய் வானைமண வாளா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (5)

## தெய்வத்தை உகந்தளியென்பது

17. சரவணப் பொய்கையி லுதித்தசண் முககுகா
சத்துருசங் காரவேலா
சங்கரி தயாபரி பராபரி மனோன்மணி
சாம்பவிதருங் குமாரா
கருதுமுன் னடியார்க ளருணகிரி நற்கீரற்
கவிதைக்கு வந்துவிமல
கதியுதவு மசுரர்குல காலனே வேலனே
கடப்பமலர் மாலையானே
குருதியுமிழ் வேலேந்து கையனே மெய்யனே
கொண்டல்வண் ணன்மருகனே
குறமங்கை தன்னைவிட் டகலாத நேயனே
கொடியேனை யாள்வதுளதோ

குரகதம யூரவாகன மேறு பாதனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (6)

## ரூபத்தியானம்

18. திருவாறு முகனென்று சேவல்கொடி யோனென்று
திருமாலின் மருகனென்று
சேணாடரேற்றித் தொழுபர னென்று குகனென்று
செங்கைவடி வேலென்று
வரைதுக ளதாகிட வேலெறிந் தவனென்று
வள்ளிமண வாளனென்று
மயில்வாக னக்கடவு ளென்றுதுதி செய்திடு
மடியார்கள்முன் புவடியேன்
ஒருநாளு மனதினில் திடமாக முன்னாம
முன்னாமலே யுழன்றேன்
உம்பற்கு மரியபே ரின்பமது நல்கியெனை
உன்கழலினாள் வதுளதோ
குருவாகி மகதேவற் குரைசெய்த நாதனே
கோவனக தாறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே.

## குருவாய் ரட்சிக்கச் சொன்னது

19. செப்பரிய யெழுவகைப் பிறவிக் கறங்கினின்
சேருமெனை யாளவேண்டி
தேசமதில் மாந்தரி னுருக்கொண்டு குருவாகி
செவியிலுப தேசமருளி
யெப்பொருட் கிறைவனே யெக்காலு மிறவாத
யீசன்திருக் குமாரா
யெவ்வுயிற் குயிராகி நிற்கின்ற சோதியே.
யிசையுமெஞ் ஞானசுடரே
அப்பணியும் வேணியன் அண்ணல் குருவாகிய
ஆறுமுக தேசிகாநின்
னடியிணையைப் போற்றவுங் கொடியவினை தன்னிலே
அழுந்தாமலெனை யாளுவாய்

கொப்புகுழை காதிலரு வள்ளிபங் காளனே
　　கோவன ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
　　குமரசர வணமுருகனே. (8)

## பழையவடியாருடனே கூட்டெனுமுறைமை

20. அம்புயந் தனிலுறையு மயன்மால் புரந்தரன்
　　னமரர்தொழ வரியசுடரே
அருவுருவ மாகியப் பிரணவப் பொருளான
　　வாறுமாமுக தேசிகா
வெம்பிறவி கொள்ளாமற் நிஞ்சரணந் தஞ்சமென
　　வேண்டுமடியாற் கெளியனே
வேதமுடிவே நளின பாதமது கருதிய
　　மெய்யடிய ருய்பவர்கள்
நம்பாத கன்னெஞ்ச னாயினுங் கருணையாம்
　　நலமெழுவ தாக்கிநளின
நற்றாளினைப் பெற்று நல்லடியார் கூட்டத்தில்
　　நண்ணுமொரு நாளுமுளதோ
கும்பமுக வள்ளிதெய் வானைமண வாளனே
　　கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
　　குமரசர வணமுருகனே. (9)

## எழுவகை பேதப்பிறப்பு

21. இருவகைச் சராசர மெழுவகைத் தோற்றமா
　　யிருக்கின்ற பேதமதிலே
யெத்தனை யெனைப்பெற்ற தாய்மார் களங்கங்
　　கிருந்துவினை யனுபவித்து
கருநிறக் காலனின் பாசத்தில் கட்டுண்டு
　　கதிநரகு புக்கழுந்தி
கதிர்மதியு மிலகுமுல குள்ளனா ளவமாய்க்
　　கழித்துமிக வேதிரிந்தேன்
பரிவுடனே நின்பாத பங்கயம் பேணாத
　　பாவியேனுக் கெளியதாய்
பச்சைமயி லேறிவருஞ் சச்சையணி மார்பனே
　　பரகதியளித் தருளுவாய்

குருவென்று மாமுனி வணங்கமகிழ் தூயனே
    கோவன ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (10)

## உடலைக் கூறியது

22. தத்துவப்பிர தானமா கியகா மென்னவந்து
    தாய்க்கருவி லுற்பவித்து
தசைகுருதி நிணமூளை சீய்நரம் பென்புதோல்
    சலமலமு மிகுனாத்தமாய்
பித்தமுறு வாயுவுடன் சயித்தயமு மேலிட்டு
    பிணமாகு முடல்சுமந்தேன்
பிரமன்மா லறியாத பேரின்ப வீடெய்த
    பெரிதான மந்திரத்தை
சத்துமென் னாவினி லுரைக்கவுப தேசமது
    தந்தருள வேண்டிகுருவாய்
தாரணியி லருணாச லீசர்வடி வாகிய
    தாளிணையா லென்னையாண்டாய்
கொத்துவட பொற்கடம் பணியுமணி மார்பனே
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (11)

## ஸ்ரீமகள் பெருமையைக் கொண்டாடுதல்

23. மாதர்கள் முகம்பதும மலரென்று கண்ணினை
    வாரிவளர் கயலரென்று
வள்ளைவார் காதென்று நாசிசெண் பகமென்று
    மலைகளேமுலை களென்று
போதுறைய்யு மாதுபேரழ குநிக ராமென்று
    முத்தமுதமென் றுமொழியை
புத்தியில்லா மலவர் வெற்றியுரை செய்துலகில்
    பித்தனெனவே புகழ்ந்து
நீதியுடை யோர்மொழியை கேளாமல் பவமான
    நெறியே யுழன்றுதிரிவேன்
நேசமுட னின்னடியார் குழுவினிடை சேரவே
    நீமகிழ்ந்தருள் புரிகுவாய்

கோதிலா மதிவதன குறமங்கை நாதனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (12)

## மனதின் செய்கை

24. மதமேறித் திரிகின்ற யானையது போலவும்
மந்திதனைத்தேள் கொட்டல்போல்
வல்லியந் தனதுகொடு மைபோல வேயெங்கு
மனமானது செல்லுதே
மதலோப காமமாச் சரியமாங் காரமு
மடங்காப் பெருங்கோபமும்
மாதர்பொன் னிலவாசை தனிலே யுழன்றுனது
மலரடியைப் பூசியாத
மதியிலாச் சிறியேனைப் பொருளாக வெண்ணியே
மலர்ப்பதமெனக் கருளுவாய்
வண்ணமயில் வாகனா குண்ணெறிந் திடுவனே
வாரணக் கொடியுடையனே
குதலைமொழி வள்ளியை மகிழ்ந்தணையும் மார்பனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (13)

## அடியாருடனே அடியனாய்ச் சேரக் கூறியது

25. ஞானமுத வுங்கருணை மேகமென வந்துலகில்
நல்லடியார் வாடாமலே
நாசிமுனை மீதிலிரு விழியதனை நாட்டிமன
லயமாக்கி நாதமுடிவே
தானதுவ தாகிமல மாய்கையைக் கடந்துமேல்
சச்சிதா னந்தமுருவாய்
சண்முகச் சடாட்சர பராபர தயாபரா
சற்குருவ தாகிவந்து
மோனநிலை காட்டிவினை வாட்டியடி காட்டிஒரு
மொழியுதவி அருளாகியே
முத்திபெற வேயெனது சித்தலய மாக்குவது
முனது கட னானதலவோ

கூனிமித்த வுண்டையை யெறிந்தமால் மருகனே
 கோவனக தாறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
 குமரசர வணமுருகனே (14)

## திருவழகின் பெருமை உன்னாமை

26. செங்கழனி மாலையணி மார்பும் ராறுபுய
 திருவடியு மனதிலுன்னா
திமிரவஞ் ஞானமது மேலிட்டு வினையினிற்
 றேங்கிக் கிடந்துமிக வும்
மங்கையர்க ளாசையா கியகாம வலையிலே
 மனதுசெ லுத்தியவமாய்
வண்மைதனை யறியாத துன்மார்க் கனாகியே
 வயிற்றுகிரை தேடியும்
பங்கமது பட்டுலக வாழ்க்கை சதமென்னவே
 பரதவித் திடுமடியனை
பாததா மரைதனில் யாண்டுபவ மகலவே
 பரிவுகூர்ந் தருள்புரிகுவாய்
குங்குமப் பயோதரக் குறமங்கை பங்கனே
 கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
 குமரசர வணமுருகனே. (15)

### அருள்தந்து ரட்சிக்கச் சொன்னது

27. இன்பமுறு சாகரா யேகாந்த சோதியா
 யிரவுபக லில்லாதவா
யெவ்வுயிர்க் குயிராகி நிற்குமா னந்தனே
 யீடேற நேசவடியார்
துன்பமது நீங்கவே அருளாகி வடிவராய்த்
 தோன்றித்துணைப் பாதமுதவி
துக்கசா கரம்திற் புக்கழுந் தாமலே
 தோணிதனி லேற்றியும்
அன்புருகி என்புருகி ஆறெழுத் தாற்கரைந்
 தனலிடு மெழுகுபோல
ஆனந்த மாகவே பேரின்ப மெய்தவே
 அருளுவது முனதுகடனே

கும்பமுலை வள்ளிதனை தழுவுமலர்க் கையனே
    கோவனக ராறுமுகநற்
குரவனடி 'பார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே (16)

## காயநிலை

28. வெயில்கண்ட வெண்ணையிலை புனலெழுந் திடுமொக்குள்
    மேகத்திலு றையுமின்னல்
வீனையுறு மேல்பதுமை சுந்தரக் காத்தாடி
    விண்ணி லெறிந்தகல்லு
கயில்கொண்ட வெம்பாச காலன்வளர்த் ததகர்
    கனல்தனைக் கண்டமெழுகு
களிகொண்டு நலியுண்ணு சுட்டமுது மூட்டையைக்
    காயமென வேசுமந்து
மயல்கொண்டு மாதரிட மாய்கையினிற் சிக்கியே
    மயங்கிக் கிடந்திடுவனை
மனதுதிட மாகவே மலமாய்கை நீக்கியுன்
    மலரடியி லாளாக்குவாய்
குயில்கொண்ட குரலினாள் குறமங்கை நாதனே
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (17)

## பரபிரமத்தில் மலையப் படுத்தெனக் கூறியது

29. போதமுறு மெஞ்ஞான தீபமய மேயடியர்
    போற்றவளர் பொற்குன்றமே
போதயன் வணங்குமலர்த் தாளாய் நிறைந்தபரி
    பூரணம தாயுறைவனே
வேதமுற வினில்நித்த மாடுமா மைந்தனே
    வித்தான சோதிசுடரே
விள்ளுதற் கரிதான யின்பசுக வாரியே
    மேலாய் விளங்குபொருளே

தாதவிழு கொன்றையணி வேணிய னளித்தசிவ
சண்முகமெஞ் ஞானவடிவே
தத்துவா தீதப்பொருள் தந்துயளி யாயுனது
தாளினையி லெனையாளுவாய்
கோதைகுற மாதினொடு கூடிவிளை யாடுவோய்
கோவகை ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (18)

## தலங்கள் பெருமை

30. செந்திபதி தன்னினும் ஆவினங் குடியினும்
திருப்பரங் குன்றதனினுங்
திருவாடு துறையினுஞ் சாமிமலை தன்னிலுந்
திருத்தணிகை மாமலையிலும்
வந்தடியார் போற்றவள ரருணகிரி தன்னினும்
வண்மையுள மயிலைதனினும்
மயிலின்மிசை யேறியே வள்ளிதெய் வானையெனு
மாதருடன் வீற்றிருந்தாய்
அந்திபக லுன்பாத சிந்தனை ஒழுக்கமு
மாசார நேமமுளதும்
அடியார்கள் பத்தியும் தவறாத வசனமும்
அடியனுக் கென்றுதருவாய்
கொதந்தகவிழு நற்கடம் பணியுமணி மார்பனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (19)

## நாதவிந்து உற்பத்தி

31. தந்தைதா யிருவருங் கூடிரதி கேளியிற்
தாதுவினி லுற்பவித்து
தாய்வயிறு நீங்கிதச மாசமுஞ் சென்றபின்
தாரணியி லேபிறந்து
சந்ததமு மெண்ணைமருந் துண்டுமுலை யுண்டுபின்
தவழ்ந்தடியெ டுத்துதாண்டி
தத்தடியு மிட்டுவிளை யாடிபல நூற்களைத்
தவறாமல் கற்றுணர்ந்து

சிந்தையகம் நீங்கியே சண்முக தயாபரா
தெய்வமே யென்றுவாழ்த்தி
திருவடியைப் பேணாத னாயினுங் கடையனேன்
சென்மமுஞ் சென்மமாமோ
கொந்துலவு செங்கழனி மாலையணி மார்பனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (20)

## அடியார் வருத்தம்

32. வெண்ணீ றணிந்துதிரு வேடமும் புனைந்துசிவ
மெஞ்ஞான நிட்டைசார்ந்து
வேதமுடி வினில்நித்த மாடுபொரு ளைக்கண்டு
மெய்ப்புளகி யானந்தமாய்
கண்ணீர் சொரிந்துபர வசமாகி மொழிதளரி
கைகூப்பி நறவுகமழுங்
கமலமல ரிணையிலா கழலிணைகள் பரவியே
கதிபெறுவர் நல்லவடியார்
தண்ணீரு றைந்தசடை சங்கர னளித்தருளுஞ்
சத்துருசங் காரவேலா
சண்முகா வீசாகு கநமோநம வென்றேத்திடாத்
தமியேனை யினியாளுவாய்
குண்ணேறி வைகிய குழந்தைவடி வேலனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (21)

## சிவத்தின் பெருமைகூறி ரட்சிக்கச் சொன்னது

33. திருமன்றில் நடனமிடு தேவதே வாதிபன்
சிவகாமி வல்லிபங்கன்
சிலையெனவே மேருவை வளைத்துதிரி புரமதனை
தீயநகை கொண்டெரித்தோன்
கரியுரியைப் போர்த்தவன் அரவுபணி பூண்டவன்
காலனைமு னிந்துதைத்தோன்
கயிலைமலை யுற்றவன் றிருமைந்தனே வள்ளி
கணவனே கதிர்வேலனே

மருவியிரு பால்சூழ மயில்மீதி லேறியே
வள்ளிதெய் வானையுடனே
வஞ்சகக் காலன்வந் தெனையழைக் கும்போது
வந்துதவி செய்யவேணும்
குரவைமொழி யெயினகுல மங்கைபுணர் மார்பனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (22)

## சூரன் மாய்கை

34. அண்டரொடு முனிவரும் புண்டரீ கத்திலுறை
யயனொடு மாலிந்திரன்
அனைவரையும் வென்றுபதி னாலுலக மெதிரிலா
வாண்டதொரு சூரபத்மன்
மண்டிகனல் போலவே வந்துசம ராடியும்
வாரிதனி லேயொளித்து
மரமாகி யேவளர்ந் தண்டரண் டங்களில்
மாமாயை கொண்டுபொருத
சண்டமா ருதவேக மாவிரத மேறியே
சத்துருசங் காரவேலால்
தானவனை யிருபிளவ தாகச்செய் திடுமகிமை
சாற்றுதற் கெளிதாகுமோ
கொண்டல்பொரு வாளரக் குறமங்கை நாதனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி மார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (23)

## அறியாமை

35. தானமறி யேன்செயுந் தர்மமறி யேனல்ல
சன்மார்க்க மானதறியேன்
தவமறி யேன்ஞான நிலையுமறி யேனூல்கள்
சற்றெனினு மோதவறியேன்
நானிலமெ லாம்பரவு தெய்வதலங் கண்டறியேன்
நவநதிக ளாடியறியேன்
நல்லோ ருரைத்தமொழி கேட்டுமறி யேனுலகிற்
நல்வசன மோதவறியேன்

வானவரி றைஞ்சுமலர்ப் பதனொன்று நின்னாம
மனதினில் நினைக்கவறியேன்
மதியிலாக் கொடியேனை யினிதாள வேண்டியே
மயில்மீதி லேறிவருவாய்
கூனுபிறை செஞ்சடை யணிந்தசிவன் மைந்தனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (24)

## வள்ளியம்மை அழகு

36. செம்பவள வதரமும் நளினமலர் வதனமுஞ்
செங்கயற் கண்ணுமொளிசேர்
திருநுதற் துடியுடையிங் காரளக பந்தியுஞ்
செங்காந்தள் பொருவுகரமும்
வம்பிலா மலர்ச்செண்டு நிகரான கொங்கையு
மாந்தளிரை நிகர்பாதமும்
வளமான தரளநிகர் வெண்பலு மிளநிலா
வாய்மூரல் சிலைபுருவமும்
அம்புய மடந்தை நிகரான குறவள்ளியும்
ஆயலோ வென்றுகூவி
அன்றுபுனங் காத்தவளை நன்றிமன மயலா
யணைந்துயித ழூறலுண்ட
கும்பகெஜர் தம்பியென் வந்துயெனை யாண்டவ
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (25)

## அழகினைக் கண்டு பிரமித்தது

37. மடமயிற் சாயலின் நங்கையிவள் செங்கதிர்
வாய்த்ததிர ணங்கொளுருவம்
மைமுகிலு றைந்தமின் னென்னவே ஒப்பிலா
மாணிக்க மணிமாலையோ
கடகரியி லிசையுமக வானுறைந் தவனுலகில்
காமர்பூங் கொம்பென்னவோ
கமலமலர் வாவிபயி லன்னமோ யென்னமோ
கண்டதிலை யென்றுசென்று

தடவரை மருங்கிலுறை தையலைத் துதித்துருகி
தளர்வெய்தி மயலதாகி
சரசவை போகரதி சுககேளி கூடியது
சாற்றுதற் கெளிதாகுமோ
குடகுமலை யாளர்பணி பாதகுரு நாதனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (26)

## துன்பம்

38. அன்பான தாயகரு வினிலுதிக் கும்போது
ஐவகைய தானதுன்பம்
அல்குலின் வழியினிடை சென்றிடும் போதுந்துன்பம்
அவனிமிசை யுற்றபோதிற்
நன்பான குழவியாய்த் தவழ்ந்த போதுந்துன்பம்
நாலாறுதிங் கள்தனிலே
நலியான பிணியினால் வருகின்ற துந்துன்பம்
நடந்தோடு கையில்துன்பம்
வன்பான மாதரைத் திரவியங் களைத்தேட
வருகின்ற போதுதுன்பம்
வளமிலா துன்பமே குடிகொண்ட படிவமும்
வாழ்க்கையுஞ் சதமாகுமோ
கொம்பானை தம்பியென வந்தகுரு நாதனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (27)

## மனலயப்பட்ட சத்துமாக்களைக் கூறியது

39. ஆதியந்த மிலாக் காரண சுருபமா
யமலமா யானந்தமாய்
அரியயன் காணாத சோதியா நீதியா
யருமறையின் முடிமீதினிற்
பாதநட னங்கண்டு ஒப்பிலாப் பேரின்ப
பதமுறுவர் பழயவடியார்
பாததா மரைபணிந் தேத்தவல மாகவும்
பரிவாகி மருள்புரிகுவாய்

வேதனைச் சிறையில டைசெய்தவா விண்ணவர்
    வினைதீரச் சிறைவிடுத்த
வேலவா தோகைமயில் வாகனா காங்கேயா!
    வெற்றிவேலுத் தையா
கோதுகுழல் கொண்டகுற மாதுமகிழ் மார்பனே
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்கள.டி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (28)

## திருவழகு

40. விண்ணவர் தொழுங்கமல பாதமதி லணிகின்ற
    வெண்டைய வினோதவழகும்
விரிகதிர் பொதிந்தமணி மகுடமுடைச் சென்னியும்
    வேலேந்தி நின்றகரமும்
கண்ணுமன முருகிதிரு வழகொழுகு வதனமுங்
    கடப்பமலர் மாலைமார்புங்
கனகவரை நிகரிலா திரள்புயமு மீராறு
    கண்களும் விளங்கவிருபால்
பெண்ணமுத மாய்வருந் தெய்வானை வள்ளியும்
    பிரியாம லேயிருந்த
பெரிதான மயிலேறி யடியார்கள் முன்வரும்
    பெருமைதனை யென்றுகாண்பேன்
குண்ணனைய கொங்கையாள் குறமாது நேயனே
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (29)

## வினைக்கீடான பெருநடத்தை

41. பண்டுசெய் திடுவினைகள் மேலிட்டுச் சிறகிலா
    பட்சியென வேயலைந்து
பசிப்பிணிகள் வறுமையால் மெலியுண்டு சிறுவரும்
    பாரியு மிடுக்கணெய்தி
சண்டையா னொந்துமனம் விண்டுகட னாளியாய்த்
    தளர்ந்துஉல கந்தன்னிலே
தர்மதா னங்கள் புலவுபகா ரமில்லாமல்
    தளர்வெய்தி பொய்யுரைத்து

தொண்டரிட தொண்டனாய் வண்டருட னேமருவி
துன்மார்க்க மாய்நடந்து
சொல்லெலாம் பொய்யென்று அவமான மேலிட்ட
துட்டர்சில ருண்முகண்டாய்
குண்டமிசை யேறியவன் றந்தசிறு மதலையே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (30)

## துன்மார்க்க நடத்தையுள்ளோர் பெறும்பேறு

42. சூதான வார்த்தையுங் குலைகளவு செய்வதுந்
தோதங் களைச் செய்வதுந்
துணிவாகிப் பிறருடைய பொருள்கவர்ந் திடுவதுந்
துன்பமிக விளைவிப்பதும்
மாதாபி தாகுரு தெய்வமென் றெண்ணாமல்
மதமாகியே யிகழ்வதும்
மன்னர்குரு சாமிக்குத் துரோகம் நினைவதுங்கற்பு
மங்கையரை நிந்திப்பதும்
சாதிநெறி தனைமீறி சங்கையில் லாமலே
தசைபுலால் கள்ளுண்பதுஞ்
சத்தியமிவை யித்தகைமை யுற்றபே ரந்தகன்
தன்பதியிலடை வதுகண்டாய்
கோதாடு வள்ளியொடு வாதாடு மையனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (31)

## நல்லதோர் பெறும்பேறு

43. திருவுல வியகமல மலர்வாலி கூபங்கள்
தேம்பொழில்கள் நந்தவனந்
தேவாலயந் தர்மசத் திரமொடு நீர்ப்பந்தல்
சிவலிங்கப் பிரதிட்டையும்
பெரியோர் களாலையம் பிரமா லையங்களும்
பெரிதாய் நடத்திடுவதும்
பேசரிய கங்கைமுதல் தீர்த்தங்கள் படிவதும்
பித்தரடி யார்க்கன்புடன்

தருகுவது மித்தகைமை யுற்றபேர் சுத்தமுடன்
தாரணியி லேயிருந்து
சகலவை போகமுடன் வாழ்ந்துபர சிவனுடைய
சாலோக பதவியடைவார்
குருதியுமிழ் வேலேந்து கையனே மெய்யனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (32)

## பத்தியில்லாத் தவம்

44. கந்தமூலம் பொசித்தென்ன சடைபோட் டென்ன
காட்டினி லிருந்துமென்ன
கனமான யோகங்கள் செய்தென்ன கங்கையில்
காக்கைபோல் மூழ்கியென்ன
சந்ததமு நீங்காமல் தானமது செய்தென்ன
தவம்புரிந் தாலுமென்ன
சகலகலை களையறிந் தாலென்ன யாகங்கள்
தானது நடாத்தியென்ன
செந்தழலில் நின்றுதவஞ் செய்தென்ன காசினித்
திருவலஞ் செய்துமென்ன
செந்திவளர் சிவசுப்ர மண்ணியர்திரு வடிதனைச்
சிந்தைதனி லெண்ணாதபேர்
குந்திவுர லேறியளை யுண்டமால் மருகனே
கோ்வனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர' வணமுருகனே. (33)

## வழிபாடு

45. நம்பிவிசு வாசமாய் சிந்தைதனில் உன்பாத
நளினமது பூசிக்கவே
நலமான அங்கைகொடு மலர்தூவி நேசமாய்
நற்பூ வினைப்பரவியும்
அம்புய மலர்க்கு நிகரான கண்களலதனில்
ஆனந்த நீர்சொரியவும்
அமுதுமொழி தளிர்மெய்ப் புளகிநெக் குருகியே
அனல்மெழுகு போலுருகியும்

வெம்பிறவி பவநோய்கள் வறுமையது தீரவும்
    வேதாகமப் படியதாய்
விதிமுறைகள் தவறாமல் பலகாலும் பூசித்து
    வீடுபெறு வார்களடியார்
கும்பமுனி போற்றமகி ழும்புய பதத்தனே
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (34)

## தோத்திரம்

46. அண்டரொடு முனிவருந் தெண்டனிடு பாதனே
    யரிபிரமர் நிகரிலாத
அசுரர்குல காலனே அம்பிகை குமாரனே
    ஆறுமுக மானகோவே
தண்டரள மாலைபுனை மார்பனே சங்கரன்
    றனையனே மயில்வாகனா
தாதவிழ் பொற்கடம் பணியுமணி மார்பனே
    தானவரை வெற்றிகொண்ட
கொண்டலெனு மெய்யன்மகிழ் மருகனே முருகனே
    கோகன தாளினானே
குனறுருவ வேலேந்து கையனே அய்யனே
    கொடியேனை யாண்டருளுவாய்
குண்டல மிலங்கிடு காதனே நாதனே
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (35)

## பிரதாபம் செய்யார் வரலாறு

47. முண்டகந் தனிலுறை மின்னாளும் வெள்ளைநிற
    மொத்தாளு மேத்திவரவும்
மும்மதத் தானைமுகன் துர்க்கையுடன் கன்னியர்
    மொய்த்துவர விருபக்கமும்
தண்டரள சிவிகையி லிசைந்தருளி சங்கரித்
    தாரணியி லேயிழிந்து
சந்தி காலத்தனுட் டானமது செய்யவே
    தண்புனலைக் கேட்குமளவிற்

புண்டரிக மலர்போன்ற செங்கைவடி வேலினாற்
புனிதமாம் புணரிநீத்தம்
போதவே யழைத்திடு நாதனே யுன்பெருமை
புகலவதற் கெளிதாகுமோ
குண்டிகை கவிழ்ந்தவன் தம்பியென வந்தவா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (36)

## திருவுருவ வழகு

48. (உ)ழைநோக்கி கண்களுந் திலதமொளிர் நெற்றியும்
உயர்மதியை யொத்தமுகமும்
ஒளிபரவு ரத்தினக் குழையாடு செவிகளும்
உறுமிரதத் திருவுதரமும்
(க)ழைபொருவு தோள்களுங் கமுகென நிகழ்ந்திடுங்
கந்தரமுஞ்செம் பொன்வரைபோல்
கனதனமுஞ் செங்கமல கைகளும் பொற்புடை
கதலியெனு மிருதுடைகளும்
(இ)ழையெனத் துவன்றிடு மருங்குலுங் கண்டுமிக
யேங்கித் தயங்கிமயலாய்
யேந்திழை யைக்கூடி விளையாடியது சொல்லுதற்
கிசையுமோ யிசையாதுகாண்
(கு)ழவியென சரவணக் குளத்தில்விளை யாடுவோய்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (37)

## (சம்பந்தர் சிறப்பு)

49. (தழை)விரி கடுக்கையந் தாரணியும் வேணியன்
தன்செவியில் பிரணவத்தை
சாத்தும தனாலுலகில் போற்றவரு காழியின்
தமிழ்ஞான சம்பந்தனாய்
(உழை) நோக்கின் னம்பிகைத் திருமுலைப் பாலுண்டு
உலகினிடை மேவுமனிதர்
உண்மைபெறும் வாறுதமிழ் வேதமது வோதவரு
ஒப்பிலா ஞானஒளியே

(மழை)யுறை கூடலம் பதிசென்று சமணரை
வாதாடிக் கழுவிலிட்டு
மறையோனே யென்னையா ளிறையோனே நிகரிலா
மாணிக்க மொளிர்குன்றமே
(குழை)பொருது கண்ணிருற மாதுமகிழ் அய்யனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (38)

## கங்காளநாதர் வடிவு

50. தமருகங் கைக்கொண்டு கங்காள நாதராய்
தாரகா வனமேவியே
தவமுனிவர் மாதரைக் கற்புக ளழித்திடச்
சாபமிட வெகுளியாகி
அமர்பொருத மழுவை மாலியானை தனைவேள்வியி
லழைத்தேவ கரியுரித்து
அங்கமதில் போத்தியும் செங்கைமழு வேந்திய
அத்தனு மளித்தசுதனே
திமிரவஞ் ஞானமது நீங்கபவ நோய்கெடத்
திருவடியி லாளாக்குவாய்
திருத்தணிகைக் குன்றிலுறை செங்கழனி மாலையணி
தேவசே னாதிபதியனே
குமுதவா யமுதூறுங் குறமங்கை நாதனே
கோவனக ராறுமுகநற்
குரவுனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (39)

## பாதாரவிந்தமெனக் களியெனக் கூறியது

51. நித்திய பரிபூரண நிராமய நிராதர
நிரஞ்சனம தாகியெங்கும்
நிகரில்பரி சுத்தமாய் சகளநிட் களமுமாய்
நிர்மலு நிர்க்குணமதாய்
சத்தியமா யெவ்வுயிர்க் குமுயிராகிச் சின்மயத்
தாரகப் பிரமமாகி
தத்துவ முடிமீதி னிற்நிர்த பாரந்தனை
தருகுவதுமெந் நாள்கொலோ

வெத்திபுனை வேடர்புன மேவிபரண் மீதிலுறு
மெல்லியள் தனக்கு நிழலாய்
வேங்கைமர மாகிவளர்ந் தோங்கியது கண்டபின்
மெல்லியலு கந்துபரிவாய்
குத்திதினை மாவினை குடுக்கமகிழ்ந் துண்டவா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (40)

## பற்றுஇல்லாமை

52. வீடேது வினையேது குலமேது நலமேது
விதியேது மதியுமேது
வினையேது மலமுமேது தவமேது சிவமேது
மெய்யுடனே பொய்யுமேது
மாடேது கன்றேது மண்ணேது பொன்னேது
மக்களொடு சுற்றமேது
மனையாட்டி சுகமேது மயலேது துயரேது
வளராசை யென்பதேது
பாடேது பயமேது நரகேது கதியேது
பலசாத்தி ரங்களேது
பலனேது விரதமேது சிவஞான மாகியே
பற்றற் றிருப்பவர்க்கு
கோடான கோடிமா தவத்தோர்கள் வாழ்ந்திடுங்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (41)

## அன்பில்லாமை

53. அன்பருட னொருநாளு மருவிடே னின்னுடைய
ஆலயம் வலம்புரிகிலேன்
ஆறெழுத் தானதிரு மந்திரமென் னாவினில்
ஆசையுட னோதறிகிலேன்
நம்பிவிசு வாசமாய் கமலசர ணந்தனிற்
நாள்தோறும் பூசிக்கிலேன்
நலமான புகழையுங் கேட்கிலேன் விணயினேன்
நாயினுங் கடையாயினேன்

வெம்பிறவி சாகரங் கடந்துவடி யாருடன்
வீற்றிருக் கவுமெண்ணிலேன்
மெய்ச்சோதி கட்கடை யளிதந்து யென்னையுன்
விரைமலர்த் தாளிலாள்வாய்
கும்பமத யானைமுகன் றம்பியென வந்தவா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (42)

## உடல்பொருளாவி தத்தம்

54. சஞ்சித மலத்தையும் நீறாக்க வில்லையோ
சற்குருவ தாகிவந்து
தன்மமுட லுயிர்தனைத் தந்துபின் னுன்பாத
தாமதையி லாளவிலையோ
தஞ்சமென வந்தடிமை கொண்டுயி டையூறுகள்
தமியெனுக் கின்னுமுளவோ
சத்துசித் தானந்த நித்தியபரி பூரண
சச்சிதா னந்தரசிதா
நெஞ்சுருகி யன்பர்க ளழைத்தால் மகிழ்ச்சியாய்
நீலமயி லேறிவந்து
நிற்கவிலை யோவடியேன் முறைகேட்டு வாரா
திருப்பதுவு முண்டோ
குஞ்சுர முகத்தவன் மகிழுகுண சீலனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (43)

## அடியார்க்கு அன்பு செய்யாமை

55. வென்றிபுனை நின்னடியார் குழுவினெதிர் சென்றுபின்
வேண்டிய வரைக்கொணர்ந்து
மெல்லடி விளக்கிமலர் தூ விப்பணிந் தேற்றியு
மிக்கவுப சாரமாகி
மன்றல்புகழ் மாலைகள் புனைந்துநறுஞ் சாந்தின்னை
மார்பினி லணிந்தவமுது
மனதுகளி கூரவே யுதவிபார்க்கி ல்நல்கி
வந்தனைகள் செயதுமறியேன்

கொன்றையணி வேணியான் றந்தகுரு நாதனே
கோதிலாக் குணநிதியே
குமரவடி வேலனே வினையினி லழுந்திய
கொடியேனு முய்யவருள்வாய்
குன்றமிசை நீடிவளர் கோகனக பாதனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (44)

## எந்நேரமும் தியானம்

56. தும்மல்வரு போதினு மின்முறு போதினுந்
துயர்மே லிடும்போதினுந்
துயில்கின்ற போதினும் உண்கின்ற போதினுஞ்
சொற்பனங் காணுபோதினுங்
செம்பவள வாயினா ரதிகேளி போதினுஞ்
சிவபூசை செய்போதினுஞ்
சிறுவருடன் கொஞ்சிவிளை யாடிடும் போதினுஞ்
செலமலம் விடுபோதிலும்
தம்பிதமை யர்களொடு சண்டைகொடு போதினுஞ்
சஞ்சலம் வரும்போதினுஞ்
சற்றுமுன் னாமமது சித்தமதி லுன்னவே
தயவாகி வரமுதவுவாய்
கும்பமுலைப் பாலுண்ட யம்பிகை குமாரனே
கோவனக் ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (45)

## வினையேனெனக் கூறியது

57. படிமாதர் பொன்னாசை மூன்றையும் விட்டுனது
பாததா மரைகருதியே
பலகாற் றவஞ்செயு மடியார்க் கிரக்கமாய்ப்
பத்தியது செய்யாதவன்
உடலோடு வாழுமுயிர் சதமென்று மாய்கையி
லுற்றபவ மேசெய்யுவேன்
உண்மைதனைச் சாற்றிய ஆகமபு ராணங்க
ளோதவறி யாதவசடன்

மடமான புத்தியை யுடையேனை மிடியேனை
வன்பனாய்த் திரிகின்றேனை
மதியிலாச் சிறியேனை வினையேனைச் சான்றோர்கள்
வசனமது கேளாதேனை
கொடியேனை யாளவே குருவாகி வந்தவா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (46)

## தெரிசனம்

58. தடமாறு சோலைகளும் நந்தவவ வனங்களுந்
தண்வயல்கள் புடைசூழவே
சந்ததமு மடியார் குழாத்துடன் போற்றவே
தாரணியி லுள்ளபேர்கள்
மிடிதீர பவநோய்க ளணுகாமல் கார்த்திகை
விழாயினிற் தெரிசிப்பரே
மெய்யான தெய்வம்நீ யில்லாம லுலகினில்
வேறுமொரு தெய்வமுளதோ
வடமேரு நிகரான வாலையம் புகுந்துவல
மாய்வருவ ரன்பாகவே
வள்ளிதெய் வானையுட னெப்போது மயில்மீதில்
வந்துவர மேதருகுவாய்
குடியேற வானோரைச் சிறைமீட்ட தெய்வமே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (47)

## உறவு

59. அந்தாதி யுரைசெய்த அபிராமி பட்டரை
யாண்டவளு மன்னையாமே
ஆழியிற் பிறந்திடு மாலகா லந்தனை
யருந்தியவ னப்பனாமே
வந்தான தேவர்கள் முறையிட்ட தற்காக
வாரிதனை மந்திரத்தான்
வளமாக வேகடைந் தமுர்தமது வுதவிய
மாயவனு மாமனாமே

தந்தாயு தங்கொண்டு வடமேரு கிரிதனைத்
    தன்கையில் யேடாதாக்கி
தவமுனிவ ருரைசெய்த பாரதந் தனையெழுது
    தந்திமுக னண்ணனாமே
குந்தாயு தன்கொண்டு வந்தானை வென்றாவா
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (48)

## அனுபோகம்

60. தொண்டுபுரி யடியார்கள் சிந்தைகம லந்தனிற்
    துலங்கிவாழ் கின்றகுகனே
தொல்வினைகள் மாற்றியே ஞானசற் குருவாகி
    சொல்லாமற் சொல்லுமொழியால்
பண்டுவினை நீக்கியெனை நின்கழலி லாளாக்கி
    பரிவாகிச் சென்னிமீதிற்
பங்கய மலர்ப்பதஞ் சூட்டிபர மானந்தப்
    பாற்கடலி லாழ்த்திமிகவும்
கண்டுகொடு துதிசெய்ய வாக்குமன மெட்டாத
    காரண சுகானந்தமாய்
களிகொண்டு மெய்மறந் தானந்த மாக்கிய
    கருணைகுடி கொண்டகண்ணா
கொண்டலுறை மாடமதில் கோவுர மிலங்கிய
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (49)

## போற்றுதல்

61. பாலொத்த நண்பினொடு நீங்காத நேயமாய்
    பத்திசெயு மடியார்களும்
பண்பான யியலிசைப் பாமாலை சாற்றியே
    பணிந்துதொழு பாவலர்களும்
சேலொத்த கண்ணியர்க ளாடலும் பாடலும்
    சேர்ந்துகை கூப்புவர்களுஞ்
செங்கோலைப் பற்றி யுலகாளு மன்னர்கள்
    செயசெயவென் றேத்தவும்

ஞாலத்தை யுண்டவனு நான்முகனு மித்திரனு
நாரதரு முதலாகிய
நாகர்முனி வர்களேற்றிப் போற்றிவல மாகவே
நலமுடனே வீற்றிருப்பாய்
கோலக்க லாபமயில் மீதேறு பாதனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (50)

## மனவாக்குக் காயத்துடன் ஒருமித்துப் போற்றியது

62. கஞ்சமலர் பாதமது கையினாற் தொழுகவுங்
கருத்தினில் நினைக்கயிருகண்
காணபுகழ் செவிகளால் கேட்க வாய்வாழ்த்தவுங்
காலினாற் வலஞ்செய்யவுஞ்
பஞ்சபா தகமொழிய திருப்பணிகள் செய்யவும்
பத்தரடி தொண்டுசெய்யவும்
பாமாலை சாத்தவும் போற்றமற வாதநிறை
பதபத்திதந் தருளுவாய்
மஞ்சுகுழல் மடமாது வள்ளிபங் காளனே
மயில்வாக னக்கடவுளே
மருமாலை புனைகின்ற திருமார்ப னேயென்னை
வந்தடிமையது கொண்டபவரே
கொஞ்சுகிளி யிஞ்சொன்மொழி வஞ்சிமகிழ் நேயனே
கோவகை ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (51)

## அடியார்கள் வேறுபொருள் வேண்டாமை

63. போகமது நீங்கிசிவ யோகமது செய்குவோர்
புத்திய கலாதநினது
பொன்னடியைப் போற்றிவல மாய்வந்து சரவணப்
பொய்கைதனி லேமூழ்கியும்
யேகமன தாகியே ஆறெழுத் தோதியும்
இருகரங் களைக்கூப்பியும்
இன்பமுறு வார்களிட தன்பெருமை நாவினா
லிசைப்பதற் கெளிதாகுமோ

பாகுமொழி மடமாத ரின்பமுட னிந்திரன்
    பதவிகளு மால்பிரமர்கள்
பதவிகளை வேண்டார்கள் நின்னருளைப் பெற்றசிவ
    பத்தருக்கு நிகராவரோ
கோகனக மென்னுமுன் பாதத்தி லன்புசெய்
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (52)

## செட்டிப்பெண் காட்சி

64. அன்றுவுன் நாமமது யிரவுபக லொழிவிலா
    தனுதினமு மனதிலுன்னி
அன்புடனே முருகவே ளென்றே யுரைத்திட்ட
    அம்மொழியைக் கேட்டுக்கணவன்
என்றுமழை யாதவனை யிப்போ தழைத்த
    தேதென்று முனிவாகியே
யிரக்கமில் லாமலே அடிக்கவுனைக் கூப்பிடும்
    ஏந்திழைமுன் வந்துநின்று
நன்றியுனை யுன்பாதத் தொண்டருடன் கூட்டியே
    நற்கதி யளித்தபரனே
நாயேனு முறையிடக் கடைக்க ணளித்துனது
    நற்பதந் தனிலாளுவாய்
குன்றுலாவிய வேட ரன்புகண்ட ரளுவாய்
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (53)

## பெருமையில் சிறுமை

65. மறையோதி சாத்திரங் கற்றுவிற் பனமிலா
    மறையோர்க ளாகியென்ன
மண்பெண்ணு பொன்னினொடு மூன்றாசை நீங்காது
    மாதவஞ் செய்துமென்ன
திறமான புயபெலம் படைத்துசெங் கோலினால்
    செகராச ராகயென்ன
செந்தமிழை யோதுபா வாணற்கு நல்கிடார்
    செல்வம்ப டைத்து மென்ன

பிறைசூடி யார்க்கன்ப ராயிருந் தடியனரப்
பேணாத புத்தியென்ன
பேசுதற் கரிதான உன்னடியைப் பூசியார்
பிறந்தென் னிறந்துமென்ன
குறமாது தன்னைவிட் டகலாத நேயனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (54)

## தருவழகு

66. திருமா துயின்ற செம்பதும மலரிணையிலா
திருவடியும் வண்டு முரலும்
தேமாலை புனைகின்ற மணிமார் புமீராறு
திண்டோள் களாறுமுகமும்
அருணாறு பணிரண்டு நயனமுங் கையினில்
அயிலேந்தி நின்றவழகும்
அமுர்தமொழி வள்ளிதெய் வானையிருபால்குழ
வழகான கோலமதனை
ஒருநாளு மறவாத சிந்தையது நல்கியே
உன்னடிமை யாக்கிக் கொள்வாய்
ஒப்பிலா மணியாக சுப்பிர மண் ணியதேவ
ஓரெழுத் தானமுதலே
குருகார் தடஞ்சோலை பெண்ணைநதி சூழ்திருக்
கோவனக ராறுமுக நற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளம்
குமரசர வணமுருகனே. (55)

## தோப்பழகு

67. தேங்குபன சைகள் சூத மந்தாரை கூவிளஞ்
சிறுசெண்பகம் பாடலந்
தேவதா ரங்கமுகு சந்தன மரிதசி
திகழாத்தி சுரபுன்னையும்
சாங்குகர வீரமா மலகநிற் குண்டிவேய்
ஓதிகதலி அகில்சம்புவ
உயரஞ்சு வடமிலவு மாதலிக் குக்கைபுளி
யொடுமுட்டி நிம்பமருது

பாங்குபெறு கிஞ்சுகம் விளவாத்தி குடசமும்
பண்பானவேங் கைவகுளம்
பாரினிலு யர்ந்திடுந் தேக்குமா தளைதாழை
பலபல தருக்களுடனே
கோங்குபொழில் சூழவே கோபுரமி லங்கிய
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிய கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (56)

## அர்ச்சுனன் தவநிலைக் காட்சி

68. பார்த்தநிலை யானதவஞ் செய்துபடை வாங்கவே
பரமனிரு தாள்கருதியே
பஞ்சாக்கினி மத்தியினி லூசிமுனை மீதிலொரு
பாதபெரு விரலூன்றியே
யேத்தரிய பாதமல ரேத்தபரி வாகியே
யீசனுமு வந்துவந்து
யினிதான பாசுபத படைதந்து வரமீய்ந்த
விறைவன் திருக்குமாரா
மாத்தரிய பிறவினோய் கொள்ளுவோர்க் கினிதான
மாமருந் தானாயவதனால்
வந்தித்துப் பூசனை செய்வோர்கள் துன்பமும்
வல்பிணி யகற்றிவைப்பாய்
கூத்தணு காமலெனை காத்தருளு மையனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (57)

## அடிமைகொண்டு உபதேசித்தது

69. ஆத்தாத பிறவிநோய் கொள்ளுமடி யேன்றனை
அஞ்சலென் றருகழைத்து
அசையாம லிருமென்று சிரமீது கரமிட்டு
அள்ளிவெண் ணீற்றையிட்டுச்
சாத்தாதே சாத்துமொழி சாத்தியிட பிங்கலைத்
தம்பித்து யிருபார்வையுஞ்
சமமாக சுழியாகு முனைமீதில் நாட்டியே
சஞ்சல மெலாமகற்றிச்

சோத்தான நீருக்கு தேத்தானை போலவே
சிவஞரின போதத்திலே
சித்தலய மாக்கியே அற்புதா னந்தமாய்
சித்துவினி லாழ்த்திவைத்தாய்
கூத்தாடு மயில்மீதின் பாத்தேறு மையனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரமசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (58)

## மெஞ்ஞானம் பெறுவது அரிதெனக் கூறியது

70. வீறுமறை நூல்கள்பல சாத்திர முணர்ந்துலகில்
மெஞ்ஞான குருவைச்சார்ந்து
மெல்லடி விளக்கிமலர் தூவிபணி விடைசெய்து
மெய்யன்பு கொண்டுபரவி
நீறணியு மன்பருளங் கண்டுமகிழ் வொடுகுரவன்
நேமித்து நிலையாகிய
நிட்டையது தந்தபின் ஐம்புலன டக்கியே
நினைப்போடு மறப்பைநீக்கி
தூறடைந் திடுமனது மையமாக்கி யின்பமாய்ச்
சுகானந்த வாரிதனிலே
தூங்காமற் தூங்கவும் நீங்காம லெந்தநாள்
சுகித்திடுதற் கெளிதாகுமோ
கூறுசெய்த சூரன்ன வாரியி லெறிந்தவா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (59)

## அறம்செய்யினும் மனலயப்படாதென்பது

71. தடங்களிற் படிந்தறஞ் செய்வதும் நெறிதனிற்
சாலைகள் சமைத்திடுவதுந்
தடமேறி நந்தவானங் களொடுநீர்ப் பந்தல்
தரணிவல மேசெய்வதும்
மடங்கள் பலசத்திரம் அன்னதா னங்களொடு
மாதவங் களைச்செய்வதும்
மலைவாசந் தலவாசஞ் செய்வதுவு மெழுகோடி
மந்திரங் களைக்கற்பதும்

திடங்கள்பெற நூல்கள்தனை யோதுவது மெய்யினிற்
திருவேட மதுபுனைவதுந்
திருநீறணிந் துசெபஞ்செய் துமதினர் லென்ன
சித்தலய மாவதுண்டோ
குடங்கையில் துயின்றிடுங் குறமங்கை நாதனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரமசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (60)

## செய்யாத காரியம் செய்தாலும் தன்னை யறியக் கூடாதென்பது

72. கம்பமாலி யானையைத் தூக்கலாங் கையினால்
கடல்நீந்திக் கரையேறலாங்
காவேரி யாற்யையு மறித்துக்கரை கட்டலாம்
கனல்மூழ்கி மீண்டுவரலாம்
அம்புயா சனனையுங் காணாலாஞ் சிமிழினில்
அடைக்கலா மகமேருவை
அறியாத தீவுகளை அறியலாங் காற்றினை
அடைக்கலாங் கரகத்தினிற்
சம்பிரமா யாலகாலந் தனையுமுண் ணலாஞ்
சகலகலையுங் கற்காலம்
சாத்துவித குணமாகி அகந்தையது நீங்கியே
தன்னைத்தானே யறியலாமோ
கொம்பனாள் வள்ளிபத மன்புடன் பணிகுவோய்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (61)

## வினை

73. மிடியுற்று அழலுவார் பிணிகொண்டு நலிகுவார்
மேனியிலு றுப்புக்குறைவார்
வெள்ளத்தி லழிவார் கள்ளரால் குண்ணுவார்
வேந்தரால் கொலையுண்ணுவார்
படிமுத்து மில்லினிற் பலிகளைக் கொள்ளுவார்
பாவமிகவே செய்குவார்
பரிதாக மில்லாம லேழைபொருள் வாங்குவார்
பஞ்சபா தகம்விளைப்பார்

துடியொத்த யிடைபிறன் மங்கையரைக் கூடுவார்
துன்மார்க்க மாய்நடப்பார்
துயரத்தில் மூழ்குவார் நின்பாத பங்கயந்
துதிசெய்து பூசியாதார்
கொடிபெற்ற தாருகன் கிளைவேர் களைந்தவா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (62)

## சேர்க்கை

74. கழிசூழ்ந்த அலையாழி தன்னிலே யாற்றுநீர்
கலந்திடுதல் போல்பாலினிற்
கலந்தநீர் போலவுங் கதிர்விளக்கி னைச்சேர்ந்த
கற்பூர மதுபோலவும்
புழுசேர்ந்த வேட்டுவ னானபரி சதுபோல
புனிதமா கியநின்னருள்
போதமுறு மெஞ்ஞானி யல்லாது
புகழ்வதற் கொன்றுமுளதோ
மழுவேந்து மண்ணவருள் மதலைக்குஞ் சரமுகன்
மகிழ்துணை வனானகுகனே
மயிலூர்ந்து தெய்வானை வள்ளிபுடை சூழவே
வந்துதவி செய்யவேணும்
கொழுகொண்டு வுழ்மேழிக் கொடியாளர் வாழ்திருக்
கோவன்க ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (63)

## பேதமில்லையெனக் கூறியது

75. பாருக்குளே குயவன்செய் திடும்பாண் டங்கள்
பலவிதமு மண்ணொன்றதாம்
பலபல பசுக்கள் நிறமாகினுஞ் சுவையான
பாலெல்லா மொன்றதாகும்
யேருற்ற பணிதிகள் வேறுவே றாயினு
மிழைத்திடுந் தங்கமொன்றாம்
எழுவகைத் தோற்றமா கியகாலம தனிலே
யிருக்கின்ற சிவனொன்றாம்

பூரிக்கு மானந்த ரூபமா யெங்கினும்
பூரணமதா நிறைவனே
புனிதமா கிய வுனது பாதமது துதியாத
புல்லனெனை யாள்வதுளதோ
கோரக்க நாதர்தொழு கும்பமுனி யென்னவாழ்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரமசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (64)

## தன்செயலில்லாமை

76. பக்குவமடைந்த சிவபத்தரடி போற்றியே
பரமகுரு பரனுதவிய
பாதவுத கங்கைகொண்டு பிரசாத மதுவுண்டு
பால்வெள்ளை நீறணிந்து
துக்கசா கரம்திற் தோய்த்த மந்திரந்
துதிசெய்து ஞானநூல்கள்
சேர்ந்தின்று திடமாகி நின்மார்க்க மானபேர்
துணைகொண்டு வுலகத்திலே
மக்களுடன் கூடியே மிக்கதொழில் களைச்செய்து
மாய்கையது நீங்கிபுனித
மலரடியை மறவாமல் யின்பமொடு துன்பங்கள்
வந்திடினு நீயென்பரால்
கொக்கிறகு சூடுமுடி நக்கனடி யார்களாங்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியிஞ்வளர்
குமரசர வணமுருகனே. (65)

## அடியார் உறுதி

77. மாதருடன் கூடியே மருவிவிளை யாடினும்
வையகந் தனில்மேவியே
வளமான தொழில்களைச் செய்யினுந் தேற்றலர்
வந்திடினு சோரராலே
வேதனைகள் வருகினும் அரசர்முனி வாகிலும்
மெய்தனிற் பிணிவருகினும்
மிடிவந்து சேரினுங் குலைவந்து சேரினும்
மிருகங்க ளுரகங்களால்

யேதுவந் துறையினு மெல்லாமுன் செயலென்று
யிணைமலர்த் தாளைமறவார்
யீசனடி யார்க்கொரு வரிணையுண்டோ வுலகுளோ
ரிருவிசும்போர் கள்பணியும்
கோதமையுமை யாள்மகிழ் குழந்தைவடி வேலனே
கோவன ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (66)

## அடியார் திடம்

78. படியாளு மன்னருக் கஞ்சார்க ளறிவிலாப்
பாதகர் தமக்குமஞ்சார்
பல்லுயிரைக் கொல்லுவோற் கஞ்சார்கள் புத்தில்வாழ்
பாம்புக்குச் சற்றுமஞ்சார்
மிடியாளர் குலையாளர் கொடுமைக்கு மஞ்சார்கள்
விண்ணுறு மிடிக்குமஞ்சார்
விதிதனக் கஞ்சார்கள் அந்தகன் வரவிடும்
வெய்யதூ தற்குமஞ்சார்
அடியார்க ளொருவருக் கஞ்சார்க ளுலகுளோ
ரஞ்சுவா ருந்தனுக்கு
அடியார்க ளனென்னவே யயன்மால் புரந்தரன்
அமரர்களு மஞ்சார்களோ
கொடிதான சூரனை நொடிப்போதில் வென்றவா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரமசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (67)

## பிறரை வேண்டாமை

79. துர்ச்சன ரிடத்திலே சொல்லாம லில்லாமை
சொல்லிபொரு ளேற்காமலும்
துயரங்க ளணுகாமல் பிணிகொண்டு உழலாமல்
சொல்லாமல் சூதுமிகவும்
நச்சரவு தீண்டாமல் பேய்பில்லி சூனியம்
நாடாமல் தீயமொழிகள்
நவிலாமல் பெரியோரை யிகழாம லென்னையும்
நன்மையுட னாளவேணும்

அச்சுதன் மருகனே அய்ங்கரன் துணைவனே
அடியார்தமக் கெளியனே
ஆலால முண்டவன் யீன்றருள் புதல்வனே
ஆனந்த மாகுமிவையே
கொச்சைமொழி வள்ளியுடன் கூடிவிளை யாடுவோய்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (68)

## உருக்கம்

80. பலமான யிருளுக்கு தினகரனை யொக்குநின்
பாததா மரைகருதியே
பலகாலம் பூசித்து மாதவம் செய்குவார்
பத்தரடி பேணாமலும்
அவமாகி வீணிலே நாளெல்லாங் கழிவுண்டு
அபயமென வந்தடைந்தார்
அஞ்சலென் றென்னையும் ஆதரிக் காவிடில்
அடியார்கள் முன்புனடியேன்
சிவனீன்ற மகனென்று சேவல்கொடி யோனென்று
திருமாலின் மருகனென்று
செங்கைவடி வேலனென்று சூர்தடிந் தவனென்று
தினந்தோறும் பேசுவேனே
குவலய மெலாந்தொழக் குன்றில்வளர் தெய்வமே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவ்சிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (69)

## ஆற்றாமைத் துயர்

81. ஆவினைக் காணாத கன்றுபோல் சீடனும்
ஆசானைக் காணாதபோல்
அன்பான தாய்முகங் காணாத பிள்ளைபோல்
அலையாழி காணாதபோல்
பூவினைக் காணாத வண்டுபோல் மதியினைப்
பூங்குவளை காணாதபோல்
பெருமாள்தனைக் காணாத மிடியர்போல் பயிர்களும்
பொழிமாரி காணாதபோல்

காவினைக் காணாத குயில்போல் கரைதனைக்
காணாத வம்பிபோல்
கார்மேகங் காணாத மயில்போல் வுன்கழல்
காணாத வடியனானேன்
கூவிள மணிந்தசடை நாதனருள் குமாரனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (70)

## மயில் நடனம்

82. நெடியகடல் சூழ்புவியு முலகங்க ளீரேழும்
நேமகிரி யேமகூடம்
நீலகிரி யிமையகிரி மாந்தரகிரி மகமேரு
நிகரிலா வித்தகிரியும்.
பொடிபட வேலமாகி நடனமிடு தோகைமயில்
பொலிந்தருள் மலர்ப்பாதனே
போதயன் சிரந்தனிற் புடைக்குமலர்க் கையனே
புனிதமாந் திவ்வியமணியே
அடியவர்கள் செய்தபிழை தீர்த்தருளு மையனே
அழகான கண்மணியே
அயிலேந்து கையனே நவைதீர்த்து யென்னையுன்
னடிமைகொண் டருளவேணும்
கொடியிடைதெய் வானையுடன் கூடிவிளை யாடுவோய்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (71)

## விளையாடுதல்

83. தாபந்த மாகியே அமரர்ர்களு முனிவர்களுஞ்
சதுமுகனு மரல்முதலினோர்
சயசயா வென்றேத்தி கைதொழுது பின்வரத்
தம்பியர்க ளொன்பதிமர்கள்
சாபங்க ளேந்திவர பூதபடை தன்னுடன்
சங்கரனை யடிபுணிந்து
சக்திவேல் கைக்கொண்டு கந்தவெற் பினைவிட்டு
தர்ரணியி லேயிழிந்து

பாபங்கள் நீங்கிட அமரர்குடி யேறிடப்
பாருலகெ லாந்தழைக்க
பரிவாகி சூரசூலம் பாழாக்க வேல்தாங்கிய
பங்கையச் செங்கையனே
கூபந் தடாகங்கள் மலர்பொழில்கள் சூழ்ந்திடுங்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (72)

## முறை

84. வருந்திநான் முறையிட்டு கூப்பிட் டழைப்பதுன்
மணிசெவியிற் கேட்டிடாதோ
வந்தஞ்சலஞ் சலென் றென்றுமொழி தந்திடில்
வாய்முத் தமீந்திடாளோ
மருந்தினிற் கினிதான மதுரமொழி குறவரிட
மாதுநகை புரிகுவாளோ
மகவா னளித்தநெய் வானையாள் செவ்வாம்பல்
வாய்முத் தமீந்திடானோ
அருந்தமிழிழை யோதுவா வாணர்களு மடியார்கள்
அன்பாகத் துதியார்களோ
அண்டர்பணி கின்றபத வம்புயமெ னக்குவிவி
ஆளவரு நாளுமெதுவோ
குருந்தேறி மாதர்துகில் கொண்டமால் மருகனே
கோவனக தாறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (73)

## யோகம் - அறநெறி

85. ஊசிமுனை மீதிலொரு பாதவிர லூன்றியே
ஒப்பிலாத் தவஞ்செய்யினும்
உயர்கா னடைந்துயிலை தின்றுபஞ் சாக்கினியி
லுற்றதவமே செய்யினும்
ஆசையுட னொருகோடி யாகங்கள் செய்யினும்
அளவிலா தானதர்மம்
அனுதினஞ் செய்யினுஞ் சுருதியா றங்கமும்
ஆராய்ந்து ஓலமிடினும்

பேசரிய வட்டாங்க யோகமது செய்யினும்
  பின்னுமெய் விரதமுறினும்
பெரிதான நின்பாத முன்னாம லுன்னுவோர்
  பெறும்பே றினுக்கொக்குமோ
கோசிகன் மகந்தனைக் காத்தமால் மருகனே
  கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
  குமரசர வணமுருகனே. (74)

## மயில்வாகனன் விசையம்

86. அட்டகோ ணங்களும் யீரேழு லோகமும்
  அண்டபகி ரண்டங்களும்
அதிரம கமேருவும் பணிராசன் வெருவவும்
  அசுரர்கள் நடுக்கமிடவும்
வட்டமிட் டேநடன மிட்டுவரு மஞ்ஞையில்
  மகிழ்ந்தேறு கின்றகுகனே
மழுவேந் துமண்ண லுக்குபதேச முரைசெய்த
  வள்ளிமண வாளனேயா
மட்டுவார் குழலுமைதன் கும்பமுலைப் பாலுண்ட
  வாயனே யாழிதுயிலும்
மாயோனு மிந்திரனு நான்முகனு வாழ்கவே
  வடிவேலெ றிந்துமிகவும்
தொட்டமிடு மவுணரை வெட்டிசிறை மீட்டவா
  கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
  குமரசர வணமுருகனே. (75)

## சுகம்

86. தண்டாமரைத் திருவும் பாரதியு மிந்திராணி
  சயிலமயிற் சாயலாளுஞ்
சதுமுகனு மாலரனு மிந்திரனு முனிவருந்
  தாழ்விலா வாழ்ந்திருக்க
அண்டாமல் துயரங்கள் உலகங்க ளீடேற
  அருமறைகள் நீடிவாழ்க
அழியாமல் யாகங்கள் கலிதீர வினைகளும்
  அணுகாமல் விட்டேகவும்

வண்டார் கடப்பமலர் மாலையாய் சூரகுலம்
மாய்த்த பரமானந்தனே
வள்ளலே யுன்மகிமை சொல்லுவதற் கெளிதல்ல
மாமறைக ளறிவுறாது
கொண்டாடி வள்ளியைக் கூடியருள் செய்தவா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (76)

## பிரமத்தைக் குறித்துத் துதிசெய்தல்

88. ஆசிலா மறைகளா றங்கமுங் காணாத
அருவுருவ மாகிநின்று
அமலமா வெவ்வுயிற் குயிராகி யாக்கியு
மளித்துத் துடைத்திடுவதும்
மாசிலாச் சின்மயப் பரப்பிரம மாகியு
மன்றில்நட னம்புரிந்தும்
மலைமாதை யொருபாகம் வைப்பதுந் திசைமுகன்
மால்தேடி காணாதவன்
பாசவினை நீக்கிய அடியாரு ளத்தில்வாழ்
பரமன்றிருக் குமாரா
பங்கையத் திருமுருகா சண்முகா வென்னவே
பலபல விதந்துதித்து
கூசிப்புள கிதமெழச் செங்கைமலர் கூப்புவேன்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே (77)

## காயத்தின் புகழ்

89. நாவுண்டு வுந்தனைத் துதிசெய்ய பார்க்கவும்
நயனங்க ளுண்டுபுகழை
நலமாகக் கேட்கவுஞ் செவியுண்டு வலமாகவே
நற்றாள்க குண்டுமதுர
பாவுண்டு வாயாற் பாடவும் பூசிக்க
பங்கையச் செங்கையுண்டு
பணிதற்குச் சிரசுண்டு மனமுண்டு அன்னவே
பரகதியு முண்டுபுனித

பூவுண்டு நெறியுண்டு நிலைமீதிலுன்றிருப்
  பூங்கோயி லெங்குமுண்டு
பொல்லாத நாயினேன் பலநாளும் வீணிலே
  போக்கினே னெனையாளுவாய்
கோவென்று சிறையிட்ட தேவர்களைக் காத்தவா
  கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
  குமரசர வணமுருகனே. (78)

## தக்கன் யாகம்

90. முக்கணான் பரமேட்டி திருநுதல் தன்னிலே
  மொய்ம்புட னுதித்துவேதன்
முனிவோர் களமரர்கள் வெருண்டிரிந் தோடவே
  மோதியமா ராடிநின்றே
தக்கனார் தலைகளைத் தள்ளிசெயும் வேள்வியைத்
  தளராம லேயழித்து
சங்கரா கோலாக லஞ்செயும் வீரச்
  சகோதரா மயில்வாகனா
குக்குடத் துவசனே குண்ணெறிந் திடுவனே
  குழந்தைவடி வானபரனே
குறமங்கை பங்கநின் றிருநாம மறவாமல்
  கூறுவதற் கருள்புரிகுவாய்
கொக்கரித் திடுமசுர குலகால வேலனே.
  கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
  குமரசர வணமுருகனே. (79)

## சூரசங்கார மூர்த்தி பெருமை

91. செங்கமலக் கண்ணனும் அங்கைமழு வேந்தியுந்
  திசைமுகனு மிந்திரன்முதலோர்
செயங்கொள்ள மாட்டாத சூர்செயங் கொண்டவன்
  கிறைமீட்டு அமரர்வாழ
மங்காத பதவியைத் தந்துமக வான்மகளை
  மாலையிடு மணவாளனே
மானீன்ற குறவள்ளி மகிழ்மார்ப னேவேங்கை
  மரமாகியே வளர்ந்தோய்

சங்கரி பராபரி உலகங்க ளீன்றவள்
தனையனே யமரர்கோவே
சண்முகா புல்லறிவை நீக்கிநல் லறிவினைத்
த்ந்தருள வேணுமையா
கொங்கையெழில் பொங்குற மங்கைபுணர் மார்பனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (80)

## பரத்தையர் பெருமை

92. பூசுவார்கள் மஞ்சளைப் புனைகுவார் துகில்களை
பூட்டுவார் பணிகள்குழலில்
பகேக்களைச் சூட்டுவார் காட்டுவார் மையலைப்
புருடராய் வந்தபேர்க்கு
ஆசையாய்க் காட்டுவா ரட்டியில் லாமலே
யறைவீட்டி லேயழைப்பார்
அன்பாக மலரணை மீதினிலி ருத்துவார்
அணைத்துயித மூறல்தருவார்
காசெலாங் கொள்ளையாய்க் கொள்ளுவா ரில்லாமை
கண்டால் முனிந்துவிடுவார்
கடையான வேசியர் மாய்கையில் வீழாமலே
கருணையுட னெனையாளுவாய்
கோசலை குமாரன்மகி ழாசையுள மருகனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (81)

## சகலமும் உண்டாக

93. நல்லவரைச் சேரவும் பொல்லாரை நீங்கவும்
நாவால் ஆறெழுத்தை
நாடோறு மோதவுங் கலிதீர நோய்களும்
நாடாமலோ டமிகவும்
வல்லமை யுண்டாகவே தண்டமிழைப் பாடவும்
வளமாகப் பீடுபெறவும்
மனதுதிட மாகவும் உடலுறு தியாகவும்
மன்னவர்கள் வசமாகவும்

கல்வியில் லாமூர்க்கக் கயவரைக் கனவிலுங்
காணாத வரமெனக்கே
கருணையுட னீய்ந்துநற் கதிதந்து யீடேற
காப்பாற்ற பரமுனக்கே
கொல்லிமலை வாசனே வள்ளிமண வாளனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (82)

## சூரர் படையெழுச்சி

94. ஆளிமுக மாசூரர் கோடிசத கோடிபுலி
பாய்கொடி தானநிருதர்
சூழபுடை சூழபுலி மேவிவர வானைமுக
மாமவுணர் கோடிசூழ
தூளிக ளெழுந்து சூரர்வர வுலகமூடியது
துங்கமத வெங்களிறுகளுஞ்
சுத்திவர வாசிகளு மெத்தனை ரதத்திரளு
மெத்தனைபதா தியுடனும்
வாளிபல தூவிபுயல் போலசம ராடியெதிர்
வந்தசூர னொந்தலறிட
மார்பினைப் பிளந்து பலவ்வாளி களையேவிபடை
மாய்த்துகுரு திபெருகவே
கூளிநட மாடசம ராடிவிளை யாடுவோய்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (83)

## உமையவள் மகனைப் புகழ்ந்தது

95. படிமிசை யில்வாழு முயிரெலாந் தழைக்கவே
பரிவாகி யருள்பொழியுநற்
பங்கையத் திருவினை மணிமார்பி லணிகின்ற
பச்சைமால் தங்கையார்
அடியார் களீடேற யெண்ணான்கு விதமான
அறம்வளர்த் திடுமம்பிகை
அகிலலோ கங்களை யீன்றநா யகியுமை
அன்புட னளித்தபாலா

துடியிடை மருங்குலாள் குறமங்கை கொங்கைமேல்
 தூங்குபர மானந்தனே
சுரர்முனி வர்போற்று மலர்ப்பாதனே யென்னிடப்
 துயர்தீர வரமருளுவாய்
கொடியவிட முண்டசிவன் அருளுகுரு நாதனே
 கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
 குமரசர வணமுருகனே. (84)

## பிறரைப் புகழாமை

96. மட்டிகளை யறிவுடைய ரென்னவுங் குருடரை
 மலர்நயன ரென்றுமீயா
வம்பரைக் கொடையாள றென்னவுஞ் சோம்பரை
 மாபுருட ரென்றுமலியை
கட்டழகு உடையவ ரென்னவுஞ் சிதடரைக்
 கல்வியுடை யோரென்னவுங்
கைகொண்ட வாளினை எறிந்தோடு வார்களைக்
 கனவீர ரென்றும்பாவம்
முட்டச்செய் திடுவோரை தர்மகுண ரென்னவும்
 மொழிதப்பு வோரைசத்திய
முடையோர்க ளென்னவே யவர்களைத் துதிசெய்து
 மொழியாத வரமருளுவாய்
கொட்டி முளரியுமா மடல்காவி மடல்வாவிசூழ்
 கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
 குமரசர வணமுருகனே. (85)

## அரிது

97. சத்தவகை தோற்றத்தில் மானிடப் பிறவியாய்
 தாரணியி லுதிப்பதரிது
தரணியி லுதித்தாலும் முடமூமை பேடுகள்
 தனைநீங்கு பிறவியரிது
பெற்றகா லையில்வித் தைதற்குண ஞானமும்
 பெறுவது மிக்கவரிது
பெறில்தான தர்மமும் உபகாரஞ் செய்துபேர்
 பெறுவது மிகவுமரிது

சத்துசித் தானந்த நித்திய பரிபூரணத்
 தத்துவா தீதமாகி
சகளநிட் களமான ஒப்பிலா நின்பதந்
 தனைப்பெறுவ தரிதுவரிது
குத்தித மிலாதசிவ பத்தரடி போற்றவாழ்
 கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
 குமரசர வணமுருகனே. (86)

## தயவு

98. மதிகண்ட பவ்வமென சிந்தைமகிழ் வெய்தியே
 மாயோனும் நான்முகனும்விண்
வானோரு மிந்திரனு முனிவர்களு மேத்தியே
 மலர்மாரி மிகப்பொழியு
மெதிரொன்று மில்லாத விறுமாப் படைந்தசூ
 ரிருக்கையிடை சென்றுவைகி
யிமையோரைச் சிறைவிட்டுப் பிழையென்று சூரனுக்
 கியம்பிவா வென்றுதயவாய்
அதிசூர னாகிய வீரபாகு வைத்தூது
 அக்கண மனுப்பிவைத்த
அருள்பொழியுங் கண்ணனே பெருமைதனை யேயிருவரும்
 அறிவரோ அமரர்முதலாய்
குதிகொண்டு மாதவர்கள் சதிசெய்து போற்றவாழ்
 கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
 குமரசர வணமுருகனே. (87)

## தொண்டர் பெருமை

99. சாதியிற் கீழான சாதியோ ராயினுஞ்
 சற்குண மிலாராயினுஞ்
சற்றாகி னுங்கல்வி கற்கா தார்ராயினுஞ்
 சப்பாணி குருடரெனினும்
மேதினியி லுந்தனுக் காளாகிற் தக்கோரில்
 மிக்கோர்க ளவர்களாவார்
மெய்த்தொண்டர் பெருமையைப் பெரிதென்று அவ்வைமுன்
 விளம்பினது பொய்யல்லவே

பாதிமதி வேணியணி நாதனருள் பாலனே
பச்சையி லேறுகின்ற
பாதகுரு நாதகுற மாதுமகிழ் நேயனே
பத்தருடன் கூடியருள்வாய்
கோதிலா வமுர்தமொழி குறமாது பங்கனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (88)

## கண்காட்சி

100. கைகால்கள் தளராத முன்னமே செஙகமல
கண்களிரு ளாமுன்னமே
காலனார் தூதர்வரு முன்னமே நின்பாத
கமலங்கள் பூசிப்பதே
மைபோன்ற கண்ணியர்கள் மாயவலை சிக்கியே
மான்போலப் பரதவித்து
மைந்தர்பொருள் சுற்றமும் சதமென்று வுன்னியே
மாய்கையி லுழன்றுழன்று
வையகந் தனில்வந் துதித்து மானிடவராய்
வயதெலாஞ் சென்றபின்பு
வருந்தினால் நின்பாதம் பெறுதற்கு மெளியதோ
வருமோ வாராதென்பரே
கொய்வன மலர்வாவி கண்வயல்கள் சூழ்திருக்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே (89)

## இருந்தும் இல்லாமை

101. சாத்திர முணர்ந்தும் மனசங்கற்ப நீங்காமல்
சற்குருவைச் சார்ந்துமென்ன
தர்மதானங் கள்பல வுபகார மில்லாத
சம்பத்தி ருந்துமென்ன
போற்றுவார் மனக்குறிப் பறிந்துதன் செய்யிலா
புகழாள னென்பதென்ன
புத்தியில் லாமலே வித்தையை யறிந்தென்ன
பூசியா பத்தியென்ன

ஆற்றாத போரினிற் கஞ்சுவான் றன்னையே
அதிவீர னென்பதென்ன
அடங்காத கோபம் கற்றாம லெந்நா
ளருந்தவஞ் செய்துமென்ன
கோத்தமணி மாலையாள் குறமாது பிரியனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே (90)

## நம்புதல்

102. மாதாபி தாகுரு தெய்வம் நீயல்லாது
மற்றுமொரு தெய்வங்களை
மனதினிற் நினைக்கவு மறிகிலேன் கைகளாற்
வணக்கங்கள் செய்துமறியேன்
ஓதாதே ஓதுவது ஆறெழுத் தல்லாது
ஒருமந்திர மோதியறியேன்
உன்பாத சேவையை யல்லாது உலகத்தி
லொருசேவை செய்துமறியேன்
வேதாக மங்களில் உன்புகழை யல்லாது
வேறொன்று கேட்டுமறியேன்
வினையென்று நானொன்று மறிகிலேன் நீயலால்
வேறுமொரு தெய்வமறியேன்
கோதையர்கள் சூழவே கோலமயி லேறுவோய்
கோவனக் ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே (91)

## துதி

103. சித்தலய மாகியே அத்துவி தமாகியே
சின்மயா னந்தமான
சிவஞான யோகியர்கள் சிந்தைதனில் நீங்காத
தேவதே வாதிதேவா
முத்திதரு மெஞ்ஞான தீபசுடரே திமிர
மொழித்தருளு மானந்தனே
மேரதக மணிததருளு மைங்கரன் துணைவனே
முகில்வண் ணனார்மருகனே

சத்தியம் பிகைகாளி மாதங்கி சாமுண்டி
சாம்ளி வராகிநீலி
சங்கரி பராபரி லோகநா யகிதந்த
தனையனே யெனையாளுவாய்
கொத்தியரி வுடலுறும் பித்தனருள் பாலனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (92)

## வினை நீங்குதல்

104. பஞ்சயிந் திரியமெனும் வேடரால் வலையெனும்
பாசத்தில் வீழ்ந்துமனது
பந்தமொடு மலமாய்கை நீங்காமல் மூடியே
பரதவித் திடுமடியனை
அஞ்சலென வருளியே ஞானசற் குருவாகி
அவனியி லெழுந்துவந்து
அருணவடி வாகிய அருணா சலத்திலே
அடியிணையி லாண்டபரனே
செஞ்சடை கபால திரிசூல மழுவேந்துவோர்ன்
சிறுவனென வந்தமரர்கள்
சிறைமீட்டு அசுரரை உயிருண்ட தேவனே
தீவினையகற்றி யாள்வாய்
கொஞ்சுமட வார்களோடு மஞ்ஞைமிசை யேறுவோய்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (93)

## ஆட்டுக்கிடாய் வாகன மகிமை

105. தண்டாழி சங்குவாள் கதையை யேந்திய
தண்துளப மாலைமார்பன்
தனயன்ாய் வந்தனான் முகன்செயும் வேள்வியில்
தகர்வந்து சம்பவித்து
அண்டாம லமரருக் கிடர்செய்ய நில்லாமல்
அபயமென்று ஓடிவந்து
ஆபத்தைக் காத்திடா யென்றுமுறை யோவென
வம்போதி ரக்கமாகி

வண்டார் கடப்ப மலர்மாலையாம் செறிமயிர்
    வருடையி லுகந்தேறி
வையாளி வுலகங்க ளீரேழு நொடியினிறை
    வருமகிமை யறியலாமோ
கொண்டாடிக் குறமாது குயந்தேயும் மார்பனே
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (94)

## தாருகன் வலிமையைத் தொலைத்தல்

106. திசையானை யெட்டையுஞ் சூழ்ந்துவா னசையாத
    செம்பொன்மத மேருகிரியை
செங்கையி லேந்திவிளை யாடுவா னிந்திரன்
    தேவர்களும் வெருவியோட
தசைகுருதி நிணமூளை பெருக்க சமராடுவோன்
    தாருகனை வெற்றிவேலால்
சங்கார மதுசெய்து சிங்கமுகன் முதலாய
    தானவரை வேர்களைந்து
விசையசய வென்னவே விண்ணோர்கள் வாழ்த்திட
    விஞ்சையர்கள் பாடமுனிவர்
வேதாகமங் களால்துதி செய்ய மீண்டவா
    வேலவா வாலைவடிவா
குசைமயி லேறிவிளை யாடிவருந் நாதனே
    கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களிடி பரவசிவ கிரியில்வளர்
    குமரசர வணமுருகனே. (95)

## அறிந்தும் அறியாமை

107. ஆத்திமலர் கொன்றையும் வேணியணி நாதனார்
    அன்புடன ளித்தபாலா
ஆறுமுக மீராறு கண்களுஞ் செங்கமல
    வடியிணையை யிரவுபகலும்
ஏத்தி மறவாமலே சிந்தைதனி லுன்னுவோர்க்
    கிடர்நீக்கி வரமுதவுவா
யெனதுகுறை தீரவே வுனதருள் பெறுவது
    மெக்கால மென்றுமறியேன்

சாத்துவாய் வாய்திறந் தொருவர மளித்திடிற்
தந்தைபொருள் குறைவுவராது
தயவிலா திப்படி யிருந்தாலும் மடியனுந்
தரணிதனி லுய்யவசமோ
கூத்தனை யுதைத்தவன் குமரனென வந்தவா
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (96)

## ஏசுதல்

108. வடிவழகு ஒழுகுதிரு மகளைமரு மத்தினில்
வைத்துவகங் கள்காக்கும்
மாயோனுடன் பிறந்தாண் டிச்சி மைந்தனே
வாதாடக் காலெடுத்து
நடனமிடு பிட்டுக்கு மண்சுமந் தவனீன்ற
நாயகா குமரவேளே
நற்றமிழு ரைத்ததநக் கீரதேவனைக் காத்த
நாதனே யமரர்கோவே
துடியிடை குறமாது பங்கனென் றுன்னையே
சொல்லிவெந் நாளுமறவேன்
துட்டனென் றென்னைநீ யிகழாது சுந்தரத்
துணைமலர்ப் பாதமருளி
கொடியவினை யணுகாம லெனையாளு மையனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசா வணமுருகனே. (97)

## பிறவாமை வேண்டுதல்

109. ஒருதாய் வயிற்றினில் உருவாகி சென்மித்து
உழலாத வரமெனக்கு
உதவுவது பாரமோ அடிமைகொண் டருளுவதென்
உம்பருக்கு அரியகோவே
தருகுவா யென்றலோ நம்பினே னின்னமுந்
தாமதஞ் செய்வதேனோ
தாய்தந்தை யுத்தரவு வேணுமோ மாதர்கள்
சண்டைசெய் வார்களென்றோ

திருவிழாக் கார்த்திகை செய்துபரவி டுமெடியார்
　　தீவினையகற் றுமருள்சேர்
தேனொழுகு செங்கமலக் கண்ணனே யென்னையுன்
　　திருவடியி லாண்டருள்வாய்
குருபாத மெந்நாளு மறவாத சிந்தையான்
　　கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
　　குமரசர வணமுருகனே. (98)

## ஆட்கொள்ளுதல்

110. வலியவெனை யாளவே ஆறுமுக மீராறு
　　மலர்நயன மிருதாள்களும்
மணிமவுலி குண்டலங் கடப்பமலர் மாலையும்
　　மறைத்துகுரு வடிவாகியே
மலமகல வஞ்ஞான இருளொழிய மெஞ்ஞான
　　மதுவுதவி செய்யவேண்டி
வாழருணை மானகரில் மன்னாரு சாமிவாழ்
　　வளமான கோட்டகத்து
மலர்வாவி நந்தவனந் தனிலே. யொருவரு
　　மறியாத யிடமேவியே
மனதுலய மாகவே வுபதேச மருளியே
　　மலரடி தரித்தபரனே
குலிசன்மகள் குறமகளை யகலாத நேயனே
　　·கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
　　குமரசர வணமுருகனே. (99)

## நாமத்தின் பெருமை

111. பத்தியுட னிச்சதக முரைசெய்தே னின்னருட
　　படியலா லொன்றுமறியேன்
பஞ்சலட் சணமொன்று மறியாத சிறியனான
　　பாவலர்கள் மனமிரங்கி
குத்தமொன்று ரையாமல் சிறுவரிட மழலைமொழி
　　கூறுவது கேட்பார்போல்
குமரசர வணமுருக னென்னுமுன் னமங்கள்
　　கூறுகையி னாலேயிகழார்

நித்தியமா கியவுனது நாமமுரை செய்தபேர்
நிதிபதியை பெற்றுவுலகில்
நிலையாகி வாழ்ந்துபின் சாலோக பதவியில்
நீடுழிகா லம்வாழ்வார்
கொத்தலரிப் பூவைமுடி வைத்தசிவன் மைந்தனே
கோவனக ராறுமுகநற்
குரவனடி யடியார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமுரசர வணமுருகனே. (100)

## தோத்திரம்

112. அயிலேந்து கையனே அம்பலத் தாடுவான்
அன்புட னளித்தமணியே
ஆனந்த மேருவே இமவா னளித்தருளு
மம்பிகை யீன்றகோவே
மயில்வாக னத்தனே வள்ளிமண வாளனே
மகவான் மகட்கொழுனனே
மாயோன் மகிழ்ந்திடு மருகனே மும்மத
வாரணத்தோன் துணைவனே
வெயில்விரியு மணிமகுட முடியனே விண்ணவர்
வினைதீரச் சூர்தடிந்த
வேலனே குய்யனை யாளுஞ்சிற் பாதனே
மெய்யனே வுய்யவருள்வாய்
குயில்வேளை வாவென்று கூவுமாஞ் சோலைசூழ்
கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே. (101)

## ஆறாதாரம்

113. மூலமதில் கணபதி வாழி சுவாதிட்டான
மூர்த்திநான் முகன்வாழியே
முகுந்தன் மணிபூரகம் வாழி யேயனாகதம்
முன்னோ னுருத்திரன் வாழி
மேலேவி சுத்தியில் மகேசுவரன் வாழியே
விளங்குமாக் கினையிலேதான்
மேவுஞ் சதாசிவன் வாழியே யெனையாளு
மெஞ்ஞான குரவன்வாழி

நாலுமறை ஞாலமதி லோலமிட வாழியே
நாதாக்கள் நீடிவாழி
நல்லோர்க ளெல்லோரு மெந்நாளும் வாழியே
ஞானசாத் திரம்வாழியே
ஆலமது உண்டருளும் நீலகண்ட னும்வாழி
அம்பிகை யுமவாழிவாழி
அழியாத பதம்வாழி சிவகிரியில் மேவிய
ஆறுமுக னடிகள்வாழி. (102)

விரோதிகிருதி வருடம் மகரமாதம் 25-ம் தேதி மஞ்சக்குப்பம் ஜில்லா, விழுப்புரம் தாலுக்காவைச் சேர்ந்த, அணையேறி கிராமத்தில் இருக்கும், கணக்கு அலங்காரப்பிள்ளை குமாரன் சுப்பிராயப்பிள்ளை நெட்டெழுத்து.

காப்பு வெண்பா 2

பஞ்சரத்தனம் பாடல் 5

சிவம்செய்யுள் 3

சதகம் பாடல் 102

வாழிப்பாடல் 1

ஆகச் செய்யுள் நூத்திப் பதிமூணு. வேலும் மயிலும் துணை.

விழுப்புரம் தாலுக்காவைச் சேர்ந்த, மாத்தூரில் இருக்கும் செம்ப லிங்க முதலியார் வாசிக்கப்பட்ட சிவகிரி சதகம். இது எடுத்தவாள் பார்வையிட்டுக் கொண்டு கொடுத்து விட வேண்டியது. அப்படிக் கொடுக்காவிட்டால் சிஷ்டக்கிடக்கம்.

நித்திய பரிபூரணானந்தமெஞ்ஞான தேசிகராகிய அருணாசல சுவாமி யாக்கினை.

## பின்னிணைப்பு — 1

# குறிப்புரை

1. சீர் — சிறப்பு; மருவு — பொருந்து; சிவகிரி — ஊர்ப்பெயர்; முருகன் — இளையோன்; பேர் — பெயர்; சதகம் — இலக்கிய வகை; கரங்கள் — கைகள்; அஞ்சு — ஐந்து; சேவடி — சிவந்த அடி.

2. திமிரம் — இருள்; மெஞ்ஞானம் — உண்மை அறிவு; தேசிகன் — குரு; அமரர் - தேவர்; சிரம் — தலை; அம்புயம் — அழகிய தோள்; கஞ்சனம் — தாமரைமலர்; தாள் — திருவடி; குஞ்சரம் — யானை.

3. உறையும் — வீற்றிருக்கும்; திருமாமகள் — இலக்குமி; புதைத்தல் — சேர்த்தல்; புண்டரீகம் — தாமரைமலர்; அயன் — பிரமன்; பணி — பாம்பு; பாதலர் — பாதாள உலகத்தினர்; பூதலம் — பூமியில் உள்ளோர்; மாதவர் — பெரும் தவத்தோர்; கா — சோலை; இந்திரன் — தேவர் தலைவன்; சே — எருது; சிகாமணி — முடியில் தரிக்கும் மணி; திண் — வலி; வயில் — அயில்; கூர்வேல்; விக்கிரமம் — பராக்கிரமம்; வீரம்; செந்தில் — திருச்செந்தூர்; ஆறுபடை வீடுகளில் ஒன்று.

4. சயிலம் — மலை; செங்கை — சிவந்த கை; குவலயம் — உலகம்; தழைக்க - செழிக்க; கோவல் — திருக்கோவல் நகர்; மேவி — விரும்பி; ஒருமொழி — ஒப்பற்ற மொழி; ஒப்பிலா — ஒப்பில்லாத; சிவஞானம் — இறை அறிவு; யோகம் — பொருந்தல்.

5. புகல்வதற்கு — சொல்வதற்கு; நாமகள் — கலைமகள்; நாயேன் — நாய் போன்றவன்; புன்மொழி — இழிந்த சொல்; பூவை — நாகணவாய்ப் பறவை; கிள்ளை — கிளி.

6. திரு — செல்வம்; நிட்டை — தியானம்; மருள் — மயக்கம்; மாதவன் — திருமால்; வையகம் — உலகம்.

7. பஞ்சபாதகம் — ஐந்து தீமைகள்; ஒழிக்கும் — நீக்கும்; பறிக்கும் — பிடுங்கும்; பாவலர் — பாவில் வல்லவர்; புலவர்; பார் — நிலம்; அஞ்சல் — பயப்படாதே; ஆனந்தம் — மகிழ்ச்சி; அரி — திருமால்; அனுதினம் — தினந்தினம்; அருந்தவர் — அரிய தவத்தோர்; சஞ்சிதமலம் — முன் ஈட்டிய மலம்; சச்சிதானந்தம் — அழிவறியா இன்பம்; தாரணி — உலகம்; பவம் — பிறப்பு; கதிர் — சூரியன்.

8. சந்ததமும் — எப்பொழுதும்; சிந்தை — மனம்; சலசமலர் — தாமரை மலர்; துயர் — துன்பம்; சேண் — உயர்ந்த; சிலாக்கியம் — புகழ்ச்சி; பெருமை; தந்தி — யானை; பாங்கு — தன்மை; சங்கமர்கள் — திருக்கூட்டத்தார்; வீரசைவர்; கந்தம் — மணம்; வாவி — குளம்.

9. அண்டர் — தேவர்; அண்ணாமலை — ஊர்ப்பெயர்; குணபால் — கிழக்குப் பக்கம்; செஞ்சிமலை — ஊர்ப்பெயர்; தென்பால் — தெற்குப் பக்கம்; தொண்டர் — அடியார்; தண்டலைகள் — சோலைகள்; சோதிமலை — ஒளிமிகு மலை; சுந்தரம் — அழகு; பண்டு — முன்பு; கனமுரசம் — உறுதியான முரசம்.

10. குழாம் — கூட்டம்; முனியும் — வருந்தும்; நித்தியானந்தபதம் — வீடுபேறு அளிக்கும் திருவடி; சிவபக்தர் — சிவ அடியார்; நேமம் — நியமம்; பல்வகை வழிபாட்டு முறை; சித்தி — வீடு பேறு; சித்தர் — ஞான சித்தி அடைந்தோர்; அமுது — உணவு; ஞான உணவு; சேவிக்க — வணங்க.

11. அங்குசம் — யானைத்தோட்டி; எழுதாத அருமறைகள் — வேதம்; பாரதம் — மகாபாரதம்; ஒரு கோடு — ஒரு கொம்பு; தந்தம்; ஆடகப் பொருப்பு — பொன்மலை; மேருமலை; தந்திமுகன் — யானைமுகன்; வினாயகன்; பங்கயன் — தாமரையான்; நான்முகன்; பயோதரம் — கொங்கை; கோகனம் — செந்தாமரை.

12. அரன் — சிவபெருமான்; போதனை — அறிவுரை; ஓம் எனும் பிரணவம் உரைத்தல்; சூரன் — சூரபத்மன்; புணர்தல் - சேர்தல்; பா — பாடல்; கவிவாணர் — புலவர்; பரம் — மேலாம் இறை; பார் — உலகம்; உயர்கிரி — சிவகிரி; தரணி — உலகம்.

13. குறுமுனிவன் — அகத்தியன்; தத்துவாதீதம் — உண்மைப்பொருள்; கடவுள்; சடாட்சரம் — சடாக்கரம்; 'சரவணபவ' எனும் ஆறெழுத்து; கால காலன் — சிவபெருமான்; தனையன் — புதல்வன்; கவளம் — சோற்று உருண்டை; மதம் — மதநீர்; அம்பிகை — உமை; கனதனம் — பருத்த கொங்கை; கங்கை — கங்கைநதி; புத்திரன் — புதல்வன்; காமவேள் — மன்மதன்; அவனி — நிலவுலகம்; அயில் — வேல்; காலன் — எமன்; பதம் — திருவடி; அமராவதி — இந்திரலோகம்; மாது — பெண்.

14. எண்டிசை — எட்டு திசை; இமையவர் — தேவர்கள்; மால் — திருமால்; இரவி — சூரியன்; மதி — சந்திரன்; உரகர் — நாகர்; வயிரவர் — விஞ்சையர்; தேவர்கள்; இருபால் — இருபுறமும்;

உகந்து — மகிழ்ந்து; காமனேர் — காமனை ஒத்த; வடிவன் — உடலினன்; கானம் — காடு; குறமாது — குறப்பெண்; வள்ளி; பிளவு — பிரிவு; துய்ய — சுத்தமுள்ள; உன்னு — நினைக்கும்; ஈந்து — தந்து; தயாபரன் — கிருபையுடையோன்; கொந்து — பூங்கொத்து; வாவி — குளம்.

15. மரகதம் — நவமணிகளில் ஒன்று; பச்சை நிறம் உடையது; மெய் — உடல்; மலைமகள் — பார்வதி; ஒருபாகம் — ஒரு பகுதி; பரவசம் — தன்னுணர்வு அற்று; பாவை — பெண்; வள்ளி; மயல் — மயக்கம்; வள்ளிமலை — முருகன் உறைவிடங்களில் ஒன்று; சாரல் — மலைச்சாரல்; புனம் — கொல்லை; பைந் தொடி — பசியதொடி; மரமாகி — வேங்கை மரமாகி; இதழ் ஊறல் — இதழ் எச்சில்; மகிமை — பெருமை; குரு — தலைவன்; உரை — போதனை.

16. சதுமுகன் — நான்முகன்; விதித்திடும் — நியமித்திடும்; அண்டம் — உலகம்; சதம் — நூறு; ஞாலம் — பூமி; தானவர் — அசுரர்; மது — தேன்; கற்பகத்தரு — தேவலோக மரம்; மைந்தன் — மகன்; ஏவல் — குற்றேவல்; வையகம் — உலகம்; எதிரிலா — தனக்கு நிகரில்லா; அரிமுகன் — சிங்க முகன்; குதலை — மழலை.

17. சத்துரு — பகைவர்; சங்காரன் — அழிப்பவன்; சங்கரி — பார்வதி; தயாபரி — கிருபை உடையோள்; பராபரி — ஒழுங்கு; மனோன்மணி — பார்வதி; சாம்பவி — பார்வதி; அருணகிரி — அருணகிரிநாதர்; நற்கீரன் — நக்கீரர்; கவிதை — பாடல்; விமல கதி — மலமற்றகதி; முத்தி; குருதி — இரத்தம்; மெய்யன் — உண்மை வடிவானவன்; நேயன் — விருப்பமுடையோன்; கொண்டல் — மேகம்; கொண்டல் வண்ணன் — மேக வண்ணன்; திருமால்; மருகன் — மருமகன்; சூரகதம் — குதிரை; மயூரம் — மயில்.

18. சேணாடர் — தேவலோகத்தோர்; தொழும் — வணங்கும்; வரை — மலை; துகள் — தூள்; துதி — போற்றி; திடமாக — உறுதியாக; நாமம் — திருப்பெயர்; உன்னாமல் — நினையாமல்; உம்பர் — தேவர்; பேரின்பம் — முத்தி; நல்கி — தந்து; கழல் — திருவடி; மகதேவன் — சிவபெருமான்; நாதன் — தலைவன்.

19. செப்பரிய — சொல்லுதற்கரிய; கறங்கு — காற்றாடி; தேசம் — நாடு; மாந்தர் — மனிதர்; உரு — உருவம்; உபதேசம் — அறி

வுரை; எக்காலும் — எச்சமயத்தும்; ஈசன் — சிவபெருமான்; சோதி — ஒளி; இசையும் — பொருந்தும்; ஞானச் சுடர் — ஞான ஒளி; அப்பு — நீர்; வேணியன் — சடையன்; அடி — திருவடி; வினை — நல்வினை, தீவினை; அழுந்தாமல் — பொருந்தாமல்; கொப்பு — காதணிகளில் ஒன்று; குழை — குண்டலம்.

20. அம்புயம் — தாமரை; புரந்தரன் — இந்திரன்; அருவுருவம் — உருவமும் அருவமும் ஆனநிலை; பிரணவம் — ஓங்காரம்; வெம்பிறவி — வெய்ய பிறவி; சரணம் — 'பாதம்; தஞ்சம் — அடைக்கலம்; நளினம் — தாமரை; நண்ணும் — பொருந்தும்.

21. சராசரம் — நடையுள்ளதும் இல்லதுமாகிய பிரபஞ்சம்; பேதம் — பிரிவு; பாசம் — பாசக்கயிறு; நரகு — பாவலோகம்; கதிர் — சூரியன்; அவமாய் — வீணாய்; பேணாத — போற்றாத; சச்சை — மாலை; பரகதி — தேவகதி.

22. தத்துவம் — உண்மைப்பொருள்; பிரதானம் — முதன்மை; உற்ப வித்து — தோற்றுவித்து; தசை — சதை; நிணம் — கொழுப்பு; சீய் — சீழ்; என்பு — எலும்பு; சலம் — நீர்; நாத்தம் — நாற்றம்; பித்தம் — மயக்கம்; வாயு — காற்று; சயித்தியம் — குளிர்ச்சி; பிணம் — உயிரற்ற உடல்; பேரின்ப வீடு — வீட்டுலகம்; பெரி தான மந்திரம் — 'சரவணபவ'; சத்தும் — சற்றும்.

23. மாதர்கள் — பெண்கள்; பதுமம் — தாமரை; வாரி — குளம்; கயல் — கயல் மீன்; வள்ளை — வள்ளைக்கொடி; நாசி — மூக்கு; போது — தாமரை; அமுதம் — தேவாமிர்தம்; பித்தன் — பைத்தி யக்காரன்; பவம் — பாவம்; கோது — குற்றம்; வதனம் — முகம்.

24. மதம் — செருக்கு; மந்தி — பெண் குரங்கு; வல்லியம் — புலி; மதம் — மயக்கம்; லோபம் — பேராசை; காமம் — பகை; மாச்சரி யம் — பொறாமை; ஆங்காரம் — செருக்கு; பூசியாத — போற் றாத; வாரணம் — சேவல்.

25. வாடாமல் — நலியாமல்; மனலயம் — மனவொடுக்கம்; மலம் — மும்மலம்; ஆணவம், கன்மம், மாயை; மாய்கை — மயக்கம்; பராபரன் — ஒழுங்கானவன்; சற்குரு — நற்குரு; மோனநிலை — மௌனநிலை; வாட்டி — வதைத்து; சித்தலயம் — சித்தவொழுக் கம்; உண்டை — உருண்டை.

26. செங்கழனி — குவளை; ஈராறு — பனிரெண்டு; அஞ்ஞானம் — ஞானமின்மை; வண்மை — புகழ்; துன்மார்க்கன் — தீயவன்;

இரை — உணவு; பங்கம் — தோல்வி; சதம் — நித்தியம்; பரிவு — இரக்கம்.

27. சாகரம் — கடல்; ஏகாந்தம் — தனிமை; ஆனந்தன் — மகிழ்ச்சி யா்னவன்; துன்பம் — வருத்தம்; துக்க சாகரம் — துன்பக் கடல்; தோணி — படகு; ஆறெழுத்து — முருகன் திருமந்திரம்; ‘சரவண பவ’; அனல் — தீ; தழுவும் — அணைக்கும்.

28. வெயில் — சூரிய கிரணம்; புனல் — நீர்; மொக்குள் — குமிழி; பதுமை — பொம்மை; சுந்தரம் — அழகு; விண் — ஆகாயம்; கயில் — கையில்; தகர் — செம்மறியாட்டுக்கடா; கனல் — தீ; களி — மகிழ்ச்சி; காயம் — உடல்.

29. போதம் — விவேகம்; பொற்குன்று — பொன்மலை; பரிபூர ணம் — எங்கும் நிறைந்திருத்தல்; நித்தம் — நிதம்; வித்தான — ஞானமான; விள்ளுதல் — பிரித்தல்; சுகவாரி — ஆனந்தக்கடல்; தாது — மகரந்தம்; கொன்றை — கொன்றை மலர்; அளி - கருணை; கோதை — பெண்.

30. செந்திபதி — செந்தில்நகர்; ஆவினன்குடி — திருவாவினன்குடி; அருணகிரி — அருணமலை; மயிலை — மயிலம்; மிசை — மேல்; அந்தி — இரவு; ஆசாரம் — சுத்தம்; நேமம் — நியமம்; பத்தி — பக்தி; வசனம் — சொல்.

31. ரதிகேளி — ரதி விளையாட்டு; கலவி; தாது — சுக்கிலம்; தச மா்சம் — பத்து மாதம்; சந்ததம் — எப்பொழுதும்; தத்தல் — தாண்டல்; கடையனேன் — இழிவானவன்; சென்மம் — பிறவி.

32. வெண்ணீறு — திருநீறு; திருவேடம் — சிவவேடம்; நிட்டை — தியானம்; மெய்புளகி — உடல் மயிர் சிலிர்த்து; மொழிதளரி — மொழி தடுமாறி; நறவு — தேன்; கமலமலர் — தாமரைமலர்; தமியேன் — தனியேன்; குண்ணு — குன்று; வைகிய — பொருந்திய.

33. மன்று — சபை; தேவாதிபன் — தேவ அதிபன் — தேவர் தலை வன்; சிவகாழி வல்லி — பார்வதி; சிவகாமி — சிவனை விரும்பு வள்; சிலை — வில்; மேரு — மேரு மலை; திரிபுரம் — முப்புரம்; தீய்நகை — கோபச் சிரிப்பு; கரி — யானை; உரி — தோல்; அரவு — பாம்பு; பணி — ஆபரணம்; முனிந்து — கோபித்து; உத்தவன் — உற்றவன்; கதிர் — ஒளி; காலன் — எமன்; குரவை — ஒருவகைக் கூத்து; எயினர் — வேடர்.

34. அண்டர் — தேவர்; நெடுமால் — திருமால்; மண்டி — நெருங்கி; சமர் — போர்; வாரி — கடல்; அண்டர் அண்டம் — தேவருலகம்; சண்டமாருதம் — வலிய காற்று; புயல்; மாவிரதம் — மா + இரதம்; சாத்துதல் — சாற்றுதல்; அர — பாம்பு.

35. செயும் — செய்யும்; சன்மார்க்கம் — ஞான நெறி; நானிலம் — உலகம்; தலம் — இடம்; ஊர்; நவநதி — ஒன்பது நதிகள்; நல்வசனம் — நற்சொல்; வானவர் — தேவர்; இறைஞ்சும் — போற்றும்; மதி — அறிவு; கூனுபிறை — வளைந்த பிறை.

36. பவளம் — நவமணிகளில் ஒன்று; அதரம் — இதழ்; நுதல் — நெற்றி; கார் அளகம் — கரிய கூந்தல்; பந்தி — ஒழுங்கு; பொருவு — ஒத்த; வம்பு — கச்சு; தரளம் — முத்து; முரல் — சிரிப்பு; மடந்தை — பெண்.

37. மடமயில் — இளமயில்; சாயல் — அழகு, ஒப்பு; நங்கை — பெண்ணிற் சிறந்தாள்; கதிர் — கிரணம்; மை — கருமை; முகில் — மேகம்; மின் — மின்னல்; மாணிக்கம் — நவமணிகளில் ஒன்று; கடகரி — காட்டு யானை; மகவான் — இந்திரன்; காமர் — அழகி; தடவரை — அகன்ற மலை; மருங்கு — பக்கம்; தையல் — பெண்; சரசம் — காமலீலை; வைபோகம் — சிற்றின்ப மகிழ்ச்சி; ரதிசுககேளி — ரதி இன்ப விளையாட்டு; குடகுமலை — மேற்கு மலை.

38. குழவி — குழந்தை; நாலைந்து திங்கள் — பத்துமாதம்; நலியான — துன்பமான; பிணி — நோய்; திரவியம் — பொருள்; படிவம் — உருவம்; கொம்பானை — விநாயகன்.

39. ஆதி — முதல்; அந்தம் — முடிவு; சுரூபம் — உருவம்; அமலம் — மலமற்ற தன்மை; குழல் — கூந்தல்.

40. வெண்டையம் — சிறுமணி; வினோதம் — அழகு; பொதிந்த — மறைந்த; மகுடம் — தலையணி; சென்னி — தலை; கனகவரை — பொன்மலை.

41. பண்டு — முன்பு; பட்சி — பறவை; பாரி — மனைவி; உபகாரம் — உதவி; தொண்டர் — அடியவர்; வண்டர் — துட்டர்; குண்டை — ரிஷபம், இடபம்.

42. சூது — வஞ்சகம்; குலை — கொலை; களவு — திருட்டு; தேரதகம் — வஞ்சகம்; மாதா — தாய்; பிதா — தந்தை; மதம் — செருக்கு; நிந்தித்தல் — இகழ்ந்து பேசுதல்; சங்கை — அச்சம்;

புலால் — மாமிசம்; கள் — மது; சத்தியம் — உண்மை; அந்தகன் — எமன்; அந்தகன் தன்பதி — எமலோகம்; ஐயன் — தலைவன்.

43. கூபம் — கிணறு; பொழில் — சோலை; தெய்வாலயம் — திருக்கோயில்கள்; பித்தரடியார் — சிவனடியார்; சகலம் — எல்லாவிதமான; சாலோக பதவி — நால்வகை நெறிகளில் ஒன்று;

44. கந்தம் — கிழங்கு; யாகம் — வேள்வி; செந்தழல் — சிவந்த நெருப்பு; அளை — வெண்ணெய்.

45. விசுவாசம் — பக்தி, சிந்தை — மனம்;

46. தண் — குளிர்ச்சி; சங்கரன் — சிவன்; முருகன் — அழகுடையோன்; இளமை உடையோன்.

47. முண்டகம் — தாமரை; மின்னாள் — இலக்குமி; வெள்ளை நிறமொத்தாள் — கலைமகள்; மும்மதம் — கன்னமதம், கைமதம்; கோசமதம்; கன்னியர் — சப்த கன்னியர்; சந்திகாலம் — மாலைக்காலம்; அநுட்டானம் — ஒழுக்கம்; தண்புனல் — குளிர்ந்த நீர் — தண்ணீர்; புணரி நீத்தம் — கடல் ஆழம்; குண்டிகை — கமண்டலம்.

48. உழை — மான்; திலதம் — பொட்டு; உதரம் — வயிறு; கழை — மூங்கில்; கமுகு — பாக்குமரம்; கந்தரம் — கழுத்து; கதலி — வாழை; இழை — நூல்; மருங்குல் — இடை; ஏந்திழை — பெண்; இசையுமோ — பொருந்துமோ.

49. தழை — இலை; கடுக்கை — கொன்றைமரம்; காழி — சீகாழி — ஊர்ப்பெயர்; தமிழ் வேதம் — தேவாரம்; மழை — மேகம்; கூடலம்பதி — மதுரை நகர்; கழு — ஒருவகைக் கொலைக் கருவி.

50. தமருகம் — உடுக்கை; கங்காளம் — கபாலம்; கங்காள நாதர் — கபாலம் ஏந்தியவன்; அமர் — போர்; பொருத — சண்டையிட்ட; அங்கம் — உடல்; அத்தன் — அப்பன்; சேனாபதி — சேனைத் தலைவன்; குமுதம் — அல்லி மலர்.

51. நித்தியம் — அழிவற்றது; பரிபூரணம் — நீக்கமற நிறைந்திருத்தல்; நிராமயம் — நோயின்மை; நிராதரம் — ஆதாரமின்மை; நிரஞ்சனம் — அழுக்கின்மை; பரிசுத்தம் — தூய்மை; சகளம் — சடத்துவம்; நிட்களம் — உருவின்மை; சின்மயம் — ஞானமயம்; தாரகப் பிரமம் — முழுமுதற்பொருள் நிர்தபாதம் — உறுதிப் பொருள் தரும் திருவடி; வெத்தி — வெற்றி; பரண் — மேற்றட்டு; குடுக்க — கொடுக்க.

52. வினை — செயல்; வினை — நல்வினை, தீவினை.

53. மருவுதல் — பொருந்தல்; பிறவி சாகரம் — பிறவிக்கடல்; கட் கடை — கடைக்கண்; விரை — வாசனை;

54. சஞ்சிதமலம் — முன் ஈட்டிய மலம்; தன்மம் — தர்மம்; தஞ்சம் — சரண்; சத்து — உண்மை; சித்து — அறிவு; ஆனந்தம் — மகிழ்ச்சி; சச்சிதானந்தம் — அழிவறியாவின்பம்;

55. வந்தனை — வணக்கம்; நிதி — செல்வம்.

56. துயில் — தூக்கம்; சொற்பனம் — சொப்பனம் — கனவு; செலம் — சிறுநீர்; சஞ்சலம் — மனக்கவலை; சித்தம் — மனது.

57. படி — உலகம்; மடம் — அறிவின்மை; மடியேன் — தரித்திரன்.

58. தடம் — குளம்; புடை — பக்கம்; சந்ததம் — எப்பொழுதும்; மிடி — வறுமை.

59. அந்தாதி — ஒரு இலக்கிய வகை; அபிராமிபட்டர் — பார்வதி தேவியை வணங்கிய ஒரு அடியார்; அன்னை — உமாதேவி; ஆழி — கடல்; ஆலகாலம் — விடம்; அப்பன் — சிவன்; மாய வன் — திருமால்; தந்தாயுதம் — தந்த + ஆயுதம்; கிரி — மலை; குந்தாயுதம் — கைவேல்.

60. துலங்கி — பிரகாசித்து; தொல்வினை — பழவினை.

61. சேல் — கயல்மீன்; ஞாலம் — உலகம்; கோலம் — அழகு; கலா பம் — மயிற்றோகை.

62. பஞ்சம் — ஐந்து; பாதகம் — தீமை; மஞ்சு — அழகு; மேகம்; மடமாது — இளம்பெண்; இஞ்சொல் — இன்சொல்; வஞ்சி — பெண்.

63. போகம் — இன்பம்; பாகு — சர்க்கரை.

64. ஒழிவிலாது — நீங்காது; அனுதினம் — தினந்தினம்.

65. மறை — வேதம்; விற்பனம் — கல்வியறிவு; மாதவம் — சிறந்த தவம்; பெலம் — பலம்; செகராசர் — உலகராசர்; பாவா ணர் — கவிஞர்.

66. திருமாது — இலக்குமி; செம்பதுமலர் — செந்தாமரைமலர்; முர லும் — ஒலிக்கும்; திண்டோள் — வலியதோள்; அருணாசளும் — அருள் + நாளும்; நயனம் — கண்; அங்கை — அழகிய கை; கோலம் — உருவம்; குருகு — பறவை, நாரை.

67. தெங்கு — தென்னை; பனசை — பனை மரம்; சூதம் — மாமரம்; மந்தாரை — ஒரு பூச்செடி; கூவிளம் — வில்வமரம்; பாடலம் — பாதிரி மரம்; கரவீரம் — பொன்னலரி; ஆமலகம் — நெல்லி; நிற்குண்டி — பருத்தி; வேய் — மூங்கில்; இலவு — இலவம் பஞ்சு மரம்; மாதலி — குருக்கத்தி; முட்டி — எட்டிமரம்; நிம்பம் — வேப்பமரம்; கிஞ்சுகம் — முண் முருக்கமரம்; பலாசு மரம்; விளவு — விளா மரம்; குடசம் — வெட்பாலை மரம்; மலை மல்லிகை; வகுளம் — மகிழமரம்; தரு — மரம்.

68. பார்த்தன் — அர்ச்சுணன்; படை — பாசுபதம்; பரமன் — சிவ பெருமான்; பஞ்சாக்கினி — பஞ்ச + அக்னி; மத்தி — நடு; கூத்தணுகாமல் — கூற்றணுகாமல்.

69. ஆத்தாத — ஆற்றாத; இடபிங்கலை — இடகலை, பிங்கலை; பத்து வகையான நாடிகளில் இரண்டு; தம்பித்தல் — அசைவற நிற்றல்; சுழியாகுமுனை — சுழிமுனை; அற்புதம் — வியப்பு; சித்து — மாயவித்தை; பார்தேறும் — பார்த்தேறும்.

70. வீறு — பெருமை; நீறு — திருநீறு; ஐம்புலன் — சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்; தூறு — தூசு; தூங்கமற் தூங்கல் — யோக நித்திரை.

71. நெறி — வழி; திடம் — உறுதி; சிபம் — செபம்; குடங்கை — உள் ளங்கை; துயின்றிடும் — தூங்கிடும்.

72. கம்பம் — அசையும்; மாலியானை — பெரிய யானை; மறித்து — தடுத்து; அம்புயாசனன் — சிமிழ் — செப்பு; தீவு — நாற்புறமும் கடலால் சூழப்பட்ட நிலப்பரப்பு; கரகம் — கமண்டலம்; அகந்தை — கர்வம்.

73. பிணி — நோய்; மேனி — உடல்; கள்ளர் — திருடர்.

74. கழி — உப்பங்கழி; பரிசு — குணம்; குஞ்சரமுகன் — யானை முகன்; மேழி — கலப்பை.

75. குயவன் — மட்பாண்டம் செய்பவன்; பணிதிகள் — ஆபரணம்; ரூபம் — உருவம்; புல்லன் — அறிவற்றவன்; கோரக்கநாதர் — சித்தர்களில் ஒருவர்.

76. உதகம் — பூமி; பிரசாதம் — இறையுணவு; கொக்கு — பறவை; நக்கன் — சிவபெருமான்.

77. சோரர் — திருடர்; வேதனை — துன்பம்; முனிவு — கோபம்; உரகம் — பாம்பு — இருவிசும்பு.

78. புத்து — புற்று.

79. துர்ச்சனர் — தீமக்கள்; நச்சரவு — நஞ்சு மிகுந்த பாம்பு; பில்லி + சூனியம் — மரண வித்தை; நாடாமல் — விரும்பாமல்; நவிலாமல் — சொல்லாமல்; அச்சுதன் — திருமால்; அய்யங்கரன் — வினாயகன்; கொச்சைமொழி — இழிந்தோர் பேச்சு.

80. தினகரன் — சூரியன்; அபயம் — அடைக்கலம்; சூர் — சூரபத்மன்; குவலயம் — உலகம்.

81. ஆ — பசு; ஆசான் — குரு; மாரி — மழை; கா — குயில்; வம்பி — அம்பி — படகு; கூவிளம் — வில்வம்.

82. புவி — பூமி; நேமகிரி — நேமமலை; விந்தகிரி — விந்தமலை; இமையகிரி — இமையமலை; நீலகிரி — நீலமலை;* பிழை — தவறு; நவை — குற்றம்.

83. தாபந்தம் — வேதனை; கந்தவெற்பு — கந்தமலை.

84. மதுரமொழி — இனியமொழி; குருந்து — குருந்தமரம்; துகில் — துணி.

85. கான் — காடு; யாகம் — வேள்வி; சுருதி — வேதம்; ஆறங்கம் — வேதாங்கத்தின் பொருள் ஆறும்; அட்டாங்கயோகம் — எண் வகை யோகம்; இயமம், நியமம்; ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி.

86. அட்டகோணம் — எண்வகைக் கோணம்; அதிர — ஒலிக்க.

87. தண்டாமரைத்திரு — இலக்குமி; பாரதி — கலைமகள்; இந்திராணி — இந்திரன் மனைவி; கலி — வஞ்சகம்.

88. ஆசிலா — குற்றமில்லா; மாசு — குற்றம்; பரப்பிரமம் — மேலான கடவுள்; மலைமாது — மலைமகள் — பார்வரி; திசைமுகன் — பிரமன்.

89. பா — பாடல்.

90. முக்கணான் — சிவபெருமான்; பரமேட்டி — பரமேசுவரி; மொய்ம்புடன் — வலியுடன்; வேதன் — பிரமன்; வெருண்டு — பயந்து; குக்குடம் — கோழி; துவசன் — துவம்சன்; கொக்கரித்திடல் — ஆர்ப்பரித்தல்.

91. கண்ணன் — திருமால்; செயம் — வெற்றி; மங்காத — குறையாத; கோ — தலைவன்.

92. அட்டியில்லாமல் — தடையில்லாமல்; அறைவீடு — வீட்டின் ஒரு பகுதி; வேசியர் — பரத்தையர்; கோசலை குமாரன் — இராமன்.

93. மூர்க்கர் — உக்கிரமுள்ளோன்; கயவர் — திருடர்.

94. ஆளி — சிங்கம்; நிருதர் — அசுரர்; துங்கம் — பெருமை; களிறு — ஆண் யானை; ரதம் — தேர்; திரள் — கூட்டம்; பதாதி — காலாட்படை; வாளி — அம்பு; கூளி — பேய்.

95. தழைக்க — தளிர்க்க; எண்ணான்கு — முப்பத்திரண்டு; அகில — எல்லா; லோகம் — உலகம்.

96. மட்டி — அறிவில்லார்; குருடர் — விழியில்லார்; ஈயாவம்பர் — கஞ்சர்; லோபி; அலி — ஆணும் பெண்ணுமற்றவர்; சிதடர் — அறிவில்லான்; முட்ட — நிறைய; முளரி — தாமரை; காவி — கருங்குவளைமலர்.

97. மானிடம் — மனிதர்; முடம் — உறுப்புக் குறைவானவர்; ஊமை — பேச்சற்றோர்; பேடு — அலி; பெத்த — பெற்ற; வித்தை — அறிவு.

98. பவ்வம் — கடல்; இறுமாப்பு — பெருமிதம்; இயம்பி — சொல்லி.

99. மேதினி — உலகு; சப்பாணி — நொண்டி; அவ்வை — ஔவையார்.

100. கால தூதர் — எமதூதர்.

101. மனசங்கற்பம் — மனக்கற்பனை; போத்துவார் — போற்றுவார்; ஆத்தாத — ஆற்றாத.

102. சேவை — தொண்டு.

103. அத்துவிதம் — இருவிதமாகாமை; மோதகம் — உணவு வகை.

104. இந்திரியம் — பொறி; பந்தம் — கட்டு; திரிசூலம் — முப்பிளவாகிய ஒரு படைக்கலம்; மடவார் — பெண்கள்.

105. ஆழி — சக்கரம்; துளபம் — துளசி; தகர் — ஆடு; இடர் — துன்பம்; வருடை — ஆடு; குயம் — கொங்கை.

106. குசை — கடிவாளம்.

107. தயவு — கருணை.

108. மருமம் — மார்பு; ஆண்டிச்சி — உமாதேவி.

109. உம்பர் — தேவர்.

110. மவுலி — மணிமுடி; கோட்டகம் — கோயில்; குலிசன் — இந்திரன்.

111. பஞ்சலட்சணம் — ஐந்தழகு; முத்தம் — குற்றம்.

112. அம்பலம் — சபை; கொழுநன் — கணவன்; வாரணத்தோன் — யானைமுகன்.

113. மூலம் — மூலாதாரம்; சுவாதிட்டானம் — மூலாதாரத்திற்கும் நாபிக்கும் இடைப்பட்டது. மூர்த்தி — தலைவன்; முகுந்தன் — திருமால். மணிப்பூரகம் — நாபிக்கும் சுவாதிட்டானத்துக்கும் இடைப்பட்டது; அனாகதம் — மணிப்பூரகத்திற்கும் இதயத்திற்கும் இடைப்பட்டது; விசுத்தி — அனாகதத்திற்கு மேல் காணப்படுவது; ஆக்கினை — இலாடத்தானம்; குரவன் — குரு; நாலுமறை — ரிக், யஜுர், சாமம், அதர்வணம்; ஓலம் — சப்தம்; நாதா — தலைவா; நீலகண்டம் — விடத்தால் கறுத்த கண்டம்.

## பின்னிணைப்பு — 2

# விளக்கவுரை

## (எண் — பாடல் எண்)

### சிவகிரி

பாட்டுடைத் தலைவனாகிய 'குமர சரவண முருகன்' எழுந்தருளி இருக்கும் திருமலை. இச்சிவகிரி என்ற பெயரில் இரு ஊர்கள் உள்ளன. ஒன்று; திருநெல்வேலி மாவட்டத்தில் தென்காசியில் இருந்து இருபத்தி ஆறாவது மைலில் உள்ளது. மற்றொன்று பாட்டுடைத் தலைவனாகிய குமரசரவணமுருகன் எழுந்தருளியுள்ள ஊரின் அருகில் உள்ள மலை ஆகும். இரண்டுமே முருகன் திருத்தலங்கள் ஆகும்.

### சதகம்

சிற்றிலக்கிய வகைகளில் ஒன்று; நூறு பாடல்களைக் கொண்டு வருவது; சிவகிரி குமரன் பேரில் பாடப்பெற்ற நூறு பாடல்களை உடையதால், 'சிவகிரி குமர சதகம்' என்னும் பெயர் பெற்றது.

### நீர்மருவும் செஞ்சடையான்

கங்கையாற்றினைத் தலையில் உடைய சிவபெருமான் — செஞ்சடையான் என சிவபெருமானை அழைத்தலை,

செஞ்சடையான் போந்த தெரு[1]

எனவும், கங்கையாற்றை உடையனாதலை,

கங்கைவார் சடைக் கரந்தார்[2]

எனவும் வருவது போன்ற இலக்கிய அடிகளால் அறியலாம்.

### செந்தாமரைக் கரங்கள் அஞ்சுடையான்

சிவந்த த்ாமரை போன்ற மென்மையான துதிக்கை உள்ளிட்ட ஐந்து கரங்களை உடைய விநாயகன், ஐங்கரன் எனவும் அழைக்கப்படுவான்.

ஐந்து கரத்தானை யானை முகத்தானை[3]

எனவரும் தொடரால் அறியலாம்.

## காப்பு

வழிபடு தெய்வ வணக்கம் செய்து
மங்கல மொழிமுதல் வழுவற வகுத்தே
எடுத்துக்கொண்ட இலக்கண இலக்கியம்
இடுக்க ணின்றி இனிது முடியும்[4]

என்பதால், முருகப்பெருமான் மீது பாடப்பெறும் இந்நூல் நன்கு நிறை வேற வேண்டும் என்னும் கருத்தில், வினை தீர்க்கும் நாயகன் ஆகிய விநாயகனை, முதற்கண் போற்றி, காத்தருள்வாயாக என வணங்கியது.

## அஞ்சிரத்தான்

ஐந்து சிரங்களை உடைய சிவபெருமான், நான்கு முகங்களை உடைமையால் 'நான்முகன்' எனவும், ஆறுமுகங்களை உடைமையால், 'ஆறுமுகன்' எனவும் அழைக்கப்படுதல் போல, ஐந்து சிரங்களை உடைமையால் 'அஞ்சிரத்தான்' எனச் சிவபெருமானை அழைத்தனர். அம் சிரத்தான் எனப்பிரிந்து அழகிய சிரமுடையான் எனவும் பொருள் கொள்ளலாம்.

## குஞ்சரத்தான்

குஞ்சரத்தின் (யானையின்) முகத்தினை உடையதால் விநாயகனை, 'குஞ்சரத்தான்' எனவும் 'யானைமுகன்' என்வும் அழைப்பர்.

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்குஞ் சரக்கன்று காண்[5]

என்ற பாடலில் 'நற்குஞ்சரக்கன்று' என விநாயகனைக் குறிக்கின்றதைக் காணலாம்.

## திருக்கோயில் கண்டு வலம் வருதல்

திருமால், பிரமன், பாதாள லோகத்தவர், பூலோகத்தவர், அரிய தவத்தினை உடையோர், இந்திரன் ஆகிய எல்லோரும் வணங்கி, திருக் கோயில் வலம் வரும் என்பது பரிபாடலிலும்,

மண்மிசை யவிழ்தூ ழாய் மலர்நசி செல்வத்துப்
புன்மிசைக் கொடியோனும் புங்கவ மூர்வோனும்
மலர்மிசை முதல்வனு மற்றவ னிடைத்தோன்றி
உலகிரு ளகற்றிய பதின்மரு மிருவரும்
மருந்துரை யிருவருந் திருத்துநூ லெண்மரும்

ஆதிரை முதல்வனிற் கிளந்த
நாதப்பன் னொருவரு நன்றிசை காப்போரும்
யாவரும் பிறரு மமரரு மவுணரும்
மேவரு முதுமொழி விழுத்துவ முதல்வரும்
பற்ற கின்றுநின் காரண மாக[6]

எனத் திருப்பரங்குன்றில் உறைந்துள்ள இறைவனைப் போற்றி வணங்குவோர் இவரிருவர் என அடுக்கிச் செல்வதைக் காணலாம்.

### விக்கிரம செந்தில்

அறுபடை வீடாம் வெற்றிநகர் ஆகிய திருச்செந்தூரினைக் குறிக்கும்.

### தேவரைக் காத்தவன்

சூரபதுமன் திக்கு விசயம் செய்து அஷ்டதிக்கு பாலகர்களை வென்று, திருமாலை, பிரமன் ஆகியோரைப் போரிற் புறங்கண்டு தேவர்களை வென்று அடிமைப்படுத்தினான். பின் தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட, தேவர்கள் துயர் தீர்த்தற் பொருட்டு, சிவபெருமானின் நெற்றிக் கண்ணில் இருந்து தோன்றிய, முழுக்கடவுள் அசுரர்களை வென்று தேவரைச் சிறைமீட்டு இந்திரன் மகளாகிய தெய்வானையை மணந்தான் என்பது புராணக்கதை.

பாயிரும் பனிக்கடல் பார்த்துகள் படப்புக்குச்
சேயுயர் பிணிமுக மூர்ந்தம ருழக்கித்
தீயழ றுவைப்பத் திரியவிட் டெறிந்து
நோயுடை நுடங்குசூர் மாமுத றடிந்து
வென்றியின் மக்களு ளொருமையொரு பெயரிய
கொன்றுண லஞ்சாக் கொடுவினைக் கொஃறகை
மாய வவுணர் மருங்கறத் தபுழத்தவேல்
நாவலந் தண்பொழில் வடபொழி லாயிடைக்
குருகொடு பெயர்பெற்ற மால்வதை யுடைத்து
மலையற்றுப் பழுத்த மூவிரு கயந்தலை[7]

எனவரும் பரிபாடல் அடிகளாலும் இதனை அறியலாம்.

### குருவடிவாய் கோவல் மேவல்

அழகிய திருமுகங்கள் ஆகாசம், மலைபோன்ற பன்னிரெண்டு கரங்களும் அழகிய திருக்கையில் வேலும், கருணை மழை பொழியும் கண்

களும் மார்பில் கடப்பமலர் மாலையும் விளங்க, குருவாய் வந்து அடியா ருய்ய ஆட்கொண்டு, கோவல் நகரில் விளங்குபவர். இதனை,

திருவடியும் தண்டை யுஞ்சிலம் புஞ்சிலம் பூமருவப்
பொருவடி வேலுங் கடம்பும் தடம்புயம் ஆறிரண்டும்
மருவடி வான வதனங்க ளாறும் மலர்க்கண்களுங்
குருவடி வாய்வந்தன் னுள்ளுங் குளிரக் குடிகொண்டவே[8]

எனவரும் கந்தரலங்காரப் பாடலாலும் அறியலாம்.

### அரங்கேற்றம்

குமரசரவண முருகன் பேரில் இயற்றப்பட்ட 'குமர சதகம்' நூறு பாடலும் என் குருவாகிய சிவசண்முக மெஞ்ஞான ஆறுமுக தேசிகர் திருவடி போற்றி உரைப்பாம் எனக் கூறியது. சிவசண்முக மெஞ்ஞான ஆறுமுக தேசிகர் கோவல் ஆதீனக் குருமணியாவார். நூலாசிரியர் இவரிடம் உபதேசம் பெற்றிருக்கலாம் என்பது,

என்மொழியைக் கேட்டுவரங் கேற்றிக் கொண்ட
யென்குருவே சண்முகமா மிறையே போற்றி

எனவரும் அடிகளால் புலனாகிறது. இனி 'சண்முகமாம் இறை' என்பது குருவடிவாய் வந்து ஆட்கொண்ட, குமரசரவண முருகனையும் குறிக்க லாம்.

இப்பாடலிலிருந்து தொடர்ந்து வரும் நான்கு பாடல்களும் (6-10) திருமலைச் சிறப்புரைப்பன.

### நிட்டை

தியானம் எனப்படும். தியானமானது இடைவிடாது நினைத்திருத் தல். இதனை இருவிதமாக உரைப்பர். ஒன்று: பரத் தியானம். உருவாய சக்தியை எண்ணுதல் பரத்தியானம். இதனைச் சகளத்தியானம் எனவும் கூறுவர். மற்றொன்று: சிவத்தியானம். அதாவது ஒளியாக இருக்கும் சிவனை இடைவிடாது எண்ணுதல் ஆகும். இதனை நிட்களத் தியானம் என்பர். இதனை,

வருமாதி யீரெட்டுள் வந்த தியானம்
பொருவாத புந்தி புலன்போக மேவல்
உருவாய சந்தி பரத்தியான மூன்னுங்
குருவார் சிவத்தியானம் யோகத்தின் கூறே[9]

எனவரும் பாடலால் அறியலாம்.

## கயிலைமலை நிகரொத்த மயிலேறு சேவகன் கந்தமுறை சிவமலையதே

கயிலைமலை போன்ற பெருமையினை உடையது மயிலேறும் சேவக னாகிய கந்தன் உறையும் சிவமலை என்பது கருத்து. இவ்வாறு பாடலின் இறுதி அடிகள் ஒன்றே போல் எல்லாப் பாடல்களிலும் வருவதை மகுடம் என்பர். இந்நூலில் இவ்வைந்து பாடல்களிலும் (6-20) இம் மகுடமும், ஏனைய பாடல்களில்,

கோவனக ராறுமுகநற்
குரவனடி யார்களடி பரவசிவ கிரியில்வளர்
குமரசர வணமுருகனே

என்னும் மகுடமும் வருவதைக் காணலாம். இவ்வாறு மகுடம் பெற்று வருதலை,

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே[10]
மயிலா புரியில் வளரீசன் வாழ்வே
அவையாம் பிகைத்தாயே[11]

என்பன போன்று வருமடிகளால் அறியலாம்.

## பஞ்சபாதகம்

கொலை, களவு, கள், காமம், சூது என்னும் இவ்வைந்தினையும் பஞ்சமா பாதகங்கள் என்று கூறுவர்.

## சஞ்சிதமலம்

வினை என்பது தெரிந்து செய்யும் வினை, தெரியாமற் செய்யும் வினை என இருவகைப்படும். பிற உயிருக்கு நன்மை செய்தல் நல் வினையாகும். பிற உயிருக்குத் தீமை செய்தல் நீ வினையாகும். இப் பிறவியில் செய்யப்படும் போது அது ஆகாமியம் எனப்படும். இச் செயல்களினால் இனிமேல் வருவது பாவமும் புண்ணியமுமாகும். அவை முன்னிருந்த வினையோடு சேரும் போது அது 'சஞ்சிதமலம்' எனப்படுகிறது. அதாவது முன் ஈட்டிய வினை, இப்பிறவியில் இன்பத் தையும் துன்பத்தையும் தரும். அவ்வாறு சஞ்சிதமலம் தரும் இன்ப துன்பத்தை அனுபவிக்கும் வினை பிராரத்தம் எனப்படும்.[12] 'சேர்த்து வைக்கப்பட்டது' எனவும், 'அனாதியா யீட்டப்பட்டுள்ள கருமத்தில் அனுபவித்துத் தீர்ந்துபோக எஞ்சியது' எனவும் பொருளுரைப்பர்.[13]

### சச்சிதானந்தம்

உண்மை, அறிவு, ஆனந்தம் (சத்து சித்து ஆனந்தம்) என்னும் பரம் பொருளுக்குரிய முக்குணங்கள்.[14]

### சங்கமர்கள்

சங்கமர்கள் — திருக்கூட்டத்தார், வீரசைவர் என்படுபவர். இம்மலை யானது திருக்கோவல் ஆதீனத்திற்குச் சொந்தமானதாகையால், திருக் கோவல் ஆதீன சமயம் ஆகிய வீரசைவர்கள் நிறைந்த இடம் எனப்பட் டது. வீரசைவம் இலிங்காயதம் எனவும் குறிக்கப்படும். இக்கொள்கை யைக் கடைபிடிப்பவர் வீரசைவர் அல்லது இலிங்காயதர்கள் எனப் படுவர். இவர்கள் சிவலிங்கத்தை எந்நேரமும் உடம்பில் தரித்திருப்பர்.

வீரம் இருவகைப்படும். அது லௌகிகம், அலௌகிகம் என்பதாம். உலகியல் வாழ்வில் வெற்றி பெறுதல் லௌகிகம். நிரதிசயமான அன்புக்கு ஆதாரமான இஷ்டமான லிங்கமே தன் உயிரிலும் சிறந்த வஸ்து என நம்பி, அவ்விஷ்ட லிங்கத்துக்காகவே தனது உயிரை நிர்மல மான பந்தியினால் அர்ப்பணம் செய்யக்கூடிய மனோவீரம் உடைய வனே அலௌகிக வீரன். சுவர்க்க இன்பத்தை வெறுத்து, இஷ்டலிங்க வழிபாடு ஒன்றே ஆனந்தமெனக் கொள்ளல் அலௌகிக வீரம். இத்த கைய லௌகிக வீரம் உடையவன் 'வீரசைவன்' எனப்பெற்றான்.[15]

### சித்தராம் ஐயன்

சித்தத்தில் சிந்தித்தபடியே உடலும் உண்பனவும் அடைந்து, அனுப விக்கின்றவர்களே சித்தர்கள். இவர்கள், சிவநெறியைப் பூண்டு ஒழுகிய சித்த சமயத்தைச் சேர்ந்த தமிழ் மக்கள்.[16] சித்தை உடையவர்கள் சித்தர். அணிமா, மகிமா, லகிமா, கரிமா முதலான எண்வகை சித்து களைச் செய்வதில் வல்லவர். சித்திகளைப் பெற்ற சித்தர்கள் பதி னெண்மர் என்பர்.

சித்தர் இயல்பை,

இருந்தார் சிவமாகி எங்குந் தாமாகி
இருந்தார் சிவன்செயல் யாவையும் நோக்கி
இருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங்
கிருந்தார் இரவுவந் தெய்திய சோம்பே[17]

எனத் திருமூலர் திருமந்திரம் உரைக்கும். ஈண்டு சித்தராம் ஐயன் என்றது நூலாசிரியர், தன்னைக் குருவாய் வந்து ஆண்டுகொண்டதாகக்

கூறும் சிவசண்முக மெஞ்ஞான ஆறுமுக தேசிகரைக் குறிப்பதாக இருக்கலாம்.

## செங்கையில் வைத்தெழுதியது

விநாயகப் பெருமான், வியாசமுனிவர் பாரததைச் சொல்ல, பொன் மேருமலையை ஏடாக்கி, தன் ஒரு கொம்பினால் எழுதினார் என்பது புராணக்கதை. இதனை,

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
 முற்பட எழுதிய முதல்வோனே[18]
இலகுக டலைகற் கண்டு தேனொடு
 மிரதமு சதினைப் பிண்டி பாகுடன்
 இனிமையி னுகுருற் றெம்பி தானொரு கொம்பினாலே
எழுதென மொழியப் பண்டு பாரதம்
 வடகன சிகரச் செம்பொன் மேருவிக்
 எழுதிய பவளக் குன்று..........[19]

என்பன போன்று வருமடிகளால் அறியலாம்.

## பங்கயன் சிரத்தில் புடைத்தது

பிரணவத்தின் பொருள் அறியாது படைத்தல் தொழில் மேற்கொண்டிருந்த பிரமனுக்கு, பிரணவத்தின் பொருள் உரைத்து, தலையினில் குட்டி உபதேசித்தது. இதனை,

....................... படைப்போன்
அகந்தை உரைப்பமறை ஆதி எழுத்தென்று
உகந்த பிரணவத்தின் உண்மை—புகன்றிலையால்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்கள் என்றுமுளம்
குட்டிச் சிறையிருந்தும் கோமானே[20]

எனவரும் அடிகளால் அறியலாம்.

## குப்பய்யன்

குப்பய்யன் மனதில் குடிகொண்ட முருகனே என்று குறிப்பிடுவதால், ஒருவேளை ஆசிரியர் பெயர் 'குப்பய்யன்' ஆக இருக்கலாமோ எனத் தோன்றுகின்றது. பின்னொரு படாலில் 'குய்யன்' (112) என்ற குறிப்பும் காணப்படுகின்றது. இனிக் குய்யன் என்பது வஞ்சகன் என்ற பொருள் தருவதும் சிந்தித்ததற்குரியது.

## தெய்வத்தின் பெருமை

ஆறுமுகன் அவதாரச் சிறப்பு, உபதேசம் அருளியமை, குட்டிச் சிறை யிலிருந்து கடப்பமலர் மாலை அணிந்தது, வேல்கொண்டது, சூரனைக் காய்ந்தது, தேவன் சிறைமீட்டது, தெய்வயானையை மணந்தது போன்ற பல்வேறு பெருமைகளை உடையவன் முருகப் பெருமான். இதனை,

பூமிக்கொ ராறுதலை யாய்வந்து சரவணப்
பொய்கைதனில் விளையாடியும்
புனிதற்கு மந்தரவுப தேசமொழி சொல்லியும்
போதனைச்சிறை யில்வைத்தும்
தேமிக்க அரியரப் பிரமாதி கட்கும்
செழுக்கமுடி யாவசுரனைத்
தேகம் கிழித்துவடி வேலினால் இருகூறு
செய்தமரர் சிறைதவிர்த்தும்[21]

மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்
நிறைவயின் வழாஅது நிற்சூ வினரே
நிவந்தோங் கிமயத்து நீலப்பைஞ் சுனைப்
பயந்தோ தென்ப பதுமத்துப் பாயற்[22]

அன்னவனும் கொண்டமைதற்கு ஆற்றாள் சரவணத்தில்
சென்னியிற் கொண்டுய்யப்பத் திருவுருவாய் — முன்னர்
அனுமீன் முலையுண்டு அழுதுவிளை யாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன்.........[23]

சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ஙன் என்றுமுனம்
குட்டிச் சிறையருந்தும் கோமானே! — மட்டவிழும்
பொன்னங் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப
முன்னம் பிரமம் மொழிந்தோனே! — கொன்னெடுவேல்
தாரகனும் மாயத் தடங்கிரியும் தூளாக
வீரவடிவேல் விழுத்தோனே! சீரலைவாய்[24]

............................... மூவர்
குறைமுடித்து விண்ணம் குடியேற்றித் வேர்
சிறைமுடித்து ஆட்கொண் டளித்த தேவே! — மறைமுடிவாம்
சைவகக் கொழுந்தே! தவக்கடலே! வான்உதவும்
தெய்வக் களிற்றைமணம் செய்தோனே![25]

என்பன போன்ற அடிகளால் அறியலாம்.

### சடாட்சரம்

சடாட்சரம், ஆறெழுத்து எனப்படும். குமரசரவண முருகனின் திருநாமமாகிய 'சரவணபவ' என்னும் ஆறெழுத்து மந்திரம். ஆறெழுத்தின் மகிமையை,

உள்ளம் உவந்து
ஆறுதிருப்பதி கண்டு ஆறுஎழுத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே.[26]

எனவரும் தொடரால் அறியலாம்.

### ஈரேழ் உலகம்

பதினான்கு உலகங்கள் கீழ் உலகம் ஏழு எனவும், மேல் உலகம் ஏழு எனவும் கூறுப. இதனை,

உலகம் பதினான் காமவை கீழுல
கேழு மேலுல கேழிரு வகையுமே
கீழுல கேழவை யதல விதல
சுதல தராதல ரசாதல மகாதல
பாதாள லோக மென்னப் பகருவர்[28]

மேலுல கேழவை பூபுவ சுவசன
தவமகா சத்திய லோக மென்ப[29]

என்ற சான்றுகளால் அறியலாம்.

### எண்டிசைத் தலைவர்கள்

அஷ்டதிக்கு பாலகர்கள் எனவும் அழைக்கப்படும். இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்பார்கள். இதனை,

இந்திர னக்கினி யியம னிருதி
வருணன் வாயு குபேர னீசான
னென்றாகு மெண்டிசைப் பாவலர் பெயரே[30]

திக்குப் பாலக ரெண்ம ராமவ
ரிந்திர னக்கினி யமனிருதி வருணன்
வாயு குபேர னீசான னிவர்களே
கிரக்காதி யட்ட திக்குப் பாலகரே[31]

என்பதால் அறியலாம்.

அட்ட திக்குகள் ஆவன, கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு என்பனவாம்.

திக்கெட் டாமவை கிழக்குத் தென்கிழக்குத்
தெற்குத் தென்மேற்கு மேற்கு வடமேற்கு
வடக்கு வடகிழக் கிவையென வகுப்பர்[32]

## பாவைமேல் மயலானது

பாவை—வள்ளி. வள்ளி மேல் மயலாகி திணைப்புனம் சென்று வள்ளியைக் கண்டு விளையாடி, வேங்கை மரமாகி, பின் ஆனைமுகன் அருளால் மணந்தது.

காமம் முனிந்த கலைமுனிவன் கண்ணருளாம்
வாமமட மானின் வயிற்றுதித்துப்—பூமருவு
கானகக் குறவர் களிகூரப் பூங்குயில்போல்
ஏனல்புனங் காத்து இனிதிருந்து—மேன்மைபெறத்
தெள்ளித் தினைமாவும் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே![33]

என வருதல்கொண்டு இதனை அறியலாம்.

## குருவாகி சிவனுக்குரைத்தது

காமரு குமரன் சென்னி கதுமென வுயிர்த்து செக்கர்த்
தாமரை புரையுங் கையாற் றழுவியே அயனுந் தேற்றா
ஓமென உரைக்கும் சொல்லின் உறுபொருள் உனக்குப்
போமெனில் அதனை யின்னே புகலென இறைவன்
சொற்றான்[34]

என இறைவன் கேட்க, தந்தைக்கே மந்திரம் உபதேசம் செய்தனன் என்ப.

## அருணகிரி நக்கீரர் கவிதை

அருணகிரிநாதர், நக்கீரர் ஆகிய இருவருடைய கவிதைக்கும் உவந்து நற்கதி அளித்தவன் முருகப்பெருமான்.

நக்கீரர் இருவரில் காலத்தால் முற்பட்டவர். இவருடைய கவிதை 'திருமுருகாற்றுப்படை' என்று வழங்கப்படும். ஆறுபடை வீடுகளிலும் அமர்ந்திருக்கும் முருகப்பெருமானிடம், புலவன் ஒருவனை, முருகன் அருள் பெற்ற வேறொரு புலவன் ஆற்றுப்படுத்துவதாய் அமைந்தது.

ஆறுபடை வீடுகளின் சிறப்பும், முருகப்பெருமானின் திருவருட் சிறப்பு களும் விளக்கப்படுகின்றன. 317 அடிகளை உடையது. 'பத்துப்பாட்டு' என்னும் தொகைநூலின் முதல் நூலாக அமையப்பெற்ற சிறப்பினை உடையது.

அருணகிரிநாதர் திருப்புகழ், கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்த ரனுபூதி, திருவகுப்பு முதலான நூல்களை இயற்றியுள்ளார். இவற்றுள் திருப்புகழ் அனைவராலும் போற்றப்பெறும் சிறப்பினை உடையதாகும். திருப்புகழ் பாடல்கள் சந்தச் சிறப்பு ஒன்றே அருணகிரி நாதரின் பெருமையைப் பறைசாற்றும் எனலாம். இவர் இளமையில் சிற்றின் பத்தில் ஈடுபாடு கொண்டு, பல்வேறு நோய்களினால் பாதிக்கப்பட்டு பின் முருகப்பெருமானால் ஆட்கொள்ளப்பட்டவராவார்.

## எழுவகைப்பிறவி

ஏழ்பிறவியாவன தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, நிற்பன என்பனவும் இவற்றின் யோனிபேதம் எண்பத்தி நான்கு நூறாயிரம் என்பர். யோனி பேத விரிவான, தேவர் பதினான்கு நூறாயிரம் — மக்கள் ஒன்பது நூறாயிரம், தாபரம் இருபத்து நூறாயிரம் — ஊர்வன பதினொரு நூறாயிரம், நீர்வாழ்வன பத்து நூறாயிரம், விலங்கு பத்து நூறாயிரம் புள்பத்து நூறாயிரம் ஆகும்.

தேவு மாவுந் தாபரமும் பறவையு
மேவிய மக்க ளூர்வநீ ரனவும்
பேசி லெழுவகைப் பிறப்பென மொழிப[35]

தேவ ரீரேழ் மக்க ளொன்பான்
றாபத மிருபா னூர்வன பன்னொன்று
நீரன விலங்கு புண்ணிரல் பப்பத்தா
மாகவெண் பத்தினா லிலக்க பேத
மேவும் யோனி யாமென் றுரைப்பர்[36]

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாய்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றகித் தாவர சங்கமத்துள்[37]

எனவரும் பகுதிகள் இதனை உணர்த்துவதைக் காணலாம்.

## மாந்தரின் உருக்கொண்டு

இறைவன் அடியாரை ஆட்கொள்ளும் போது மூவகையில் ஆட்கொள்ளுதல் மரபு. தானே நேரில் வந்து உள்ளின்றுணர்த்தல். ஒரு குருவாய், மானிட உருக்கொண்டு வருதல்; தக்கதோர் குருவைக்கொண்டு உபதேசித்தல்; இதில் இரண்டாம் வகையாகிய மாந்தர் உருக்கொண்டு தனக்கு உபதேசித்ததாய், ஆசிரியர் குறிப்பிடுகிறார். மணிவாசகருக்கும் இறைவன் மானிட உருக்கொண்டு வந்து உபதேசித்தமையை,

அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையை[38]

தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்[39]

என்பன போல் வருவன வற்றால் அறியலாம்.

## எவ்வுயிற்குயிராகி நிற்றல்

இறைவரின் இயல்பை விளக்குமிடத்து, மெய்கண்டார் மூன்று வகையாக உரைப்பார். ஒன்று இறைவன் எல்லா உயிர்களிடத்தும் கலந்து அவையேவாக இருத்தல்; இரண்டு, அவ்வுயிர்களில் இருந்து விலகி தான் தனித்து இருத்தல்; மூன்று; விலகியும் விலகாதும் இருத்தல். இதனையே,

அவையே தானே ஆயிரு வினையின்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே[40]

என்பர்.

இம்மூவகை நிலைமைகளில் உயிர்களுடன் இறைவன் நீக்கம் இன்றி நிறைந்திருத்தலை இப்பாடலில் மட்டுமின்றி, பல பாடல்களில் ஆசிரியர் கூறிச் செல்வதை,

எவ்வுயிற் குயிராகி நிற்கும் ஆனந்தனே ((27)
எவ்வுயிற் குயிராகி (51)

போன்று வருவனவற்றைக் கொண்டு அறியமுடிகிறது:

## அருவுருவம்

இறைவினன் திருஉருவை மூன்று நிலைகளில் விளக்குவர்.

1. அருவத் திருமேனி

2. உருவத் திருமேனி

3. அருவுருவத் திருமேனி

அருவத் திருமேனியாவது கண்ணுக்குப் புலனாகாது இருத்தல்; உருவத் திருமேனி உடல்கொண்டு கோயில்களில் காணப்படுவது; அருவுருவத் திருமேனி என்பது முன்னிரண்டும் கலந்தநிலை—அதாவது சிவலிங்க வடிவம். இம்மூன்றில் அருவுருவத் திருமேனியை ஈண்டு ஆசிரியர் உரைத் துள்ளார். ஈண்டு முருகனைப்பற்றி உரைப்பதால், அருவுருவத் திரு மேனியைச் சிவலிங்கம் எனக் கொள்ளல் ஆகாது. அருவமும் உருவமும் எனப்பிரித்துக் கொள்ளல் வேண்டும்.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே[41]
உருவும் அருவும் உருஅருவம் ஆகிப்
பருவ வடிவம் பலவாய்................ [42]

என்பன போல் வரும் இலக்கியவடிகள் உணர்த்துவதைக் காணலாம்.

## பிணமாகும் உடல்

உடலின் இழிதகைமையை ஆசிரியர் அழகுற இப்பாடலின் முதல் இரு அடிகளில் நன்கு விளக்கிச் செல்கிறார். பெரும்பாலான இறையடி யார்கள் (திருமூலரைத் தவிர) உடம்பினை இழிவானது என்றே உரைக் கின்றனர். ஆசிரியரும் அவ்வாறே உடம்பில் இழிவை தசை, குருதி, நிணம், மூளை, சீழ், நரம்பு, என்பு, தோல்; சலம், மலம் ஆகியவை சேர்ந்த பிணமாகும் உடல் என்று குறிப்பிடுகின்றார். பட்டினத் தடிகளும்.

பீளையு நீரும் புறப்படு மொருபொறி
மீளுங் குறும்பி வெளிப்படு மொருபொறி
சளியு நீருந் தவழு மொருபொறி
உமிழ்நீர்க் கோழை யொழுகு மொருபொறி
வளியு மலமும் வழங்கு மொருபொறி
உள்ளூறத் தொடங்கி வெளிப்பட நாறுஞ்
சட்டக முடிவிற் சட்டெலும் பாகும்
உடலுறு வாழ்க்கை...................... [43]

என உரைப்பதைக் காணமுடிகிறது:

### உட்பகை ஆறு

மனிதனுக்கு உட்பகையாக அமைந்திருப்பன ஆறு ஆகும். அவை காமம், குரோதம், மோகம், உலோபம், மதம், மாச்சரியம் என்பன வாம். இப்பாடலின் இரண்டாவது அடியில் குறிப்பிட்டு, தான் அவற்றின் வழிப்படுவதாய் உரைக்கின்றார் ஆசிரியர். உட்பகை ஆறினை,

காமங் குரோத மோக முலோப
மதமாச் சரியமும் பகையா றென்ப[44]

எனப் பிங்கல நிகண்டும் உரைக்கும்.

### மூன்றாசை

ஆறு உட்பகை மனிதனைக் கெடுப்பது போல மூன்று ஆசைகளும், (மண், பொன், பெண்) மனிதனை தீவழியில் இட்டுச் செல்வனவாய் உள்ளன. இம்முக் குற்றத்தையும் கடியவேண்டும் என உரைக்காத ஆசிரியர்களே இல்லை எனலாம். ஆசிரியரும் பல இடங்களில் (57, 65) உரைத்துச் செல்கின்றார்.

### மனலயமாக்கல்

நாசியின் மீது இரு வழிகளையும் நிலை நிறுத்தி மனத்தினை ஒருநிலைப்படுத்தல். இந்நிலையை சமய நூலார் தியானம் என்பர். தியானத்தின் பல்வேறு நிலைகளில் இதுவும் ஒன்றாகும். இதனைத் திருமூலரும்,

நாட்டம் இர்ண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டமும் இல்லை உணர்வில்லை தானில்லை
தேட்டமும் இல்லை சிவனை னாமே[45]

என உரைப்பர்.

### துன்பம்

பிறவியின் பல்வேறு வகையான துன்பங்களை ஆசிரியர் அழகுபட எடுத்துரைப்பதை இப்பாடலில் காணமுடிகிறது. மணிவாசகரும் எத்தனை வகைப் பிறவித் துன்பங்களில் தாம் பிழைத்து எழுந்தார் என்பதனை விரிவாக எடுத்துரைப்பதை இப்பகுதியில் ஒப்பிட்டு உணர்தல் சிறப்புடைத்தாம்.

................. வார்கடல் உலகினில்
யானை முதலா எறும்பீ றாய
ஊனமில் யோனியின் உள்வினை பிழைத்தும்
மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து
ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களில் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாம்புவி பிழைத்தும்
எட்டு திங்களில் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்
ஆண்டுகள் தோறும் அடைந்தஅக் காலை
ஈண்டியும் இருத்தியும் ஏனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கரும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கிஉள் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்துமுன் பணைத்து
எய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்து
ஈர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையில் பிழைத்தும்
பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்த களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வியென்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்[46]

எனவரும் பகுதி வாழ்க்கையின் நிலையில்லாத் தன்மைய — இத் துணைத் துன்பங்களை உடைய தன்மையை விளக்குவதைக் காணலாம்.

## பத்தியில்லாத் தவம்

பத்தியில்லார் என்னதான் தவம் செய்தாலும் இறைவனின் அன்பை அடைய இயலாது என்பதை இப்பாடலில் ஆசிரியர் அழகுடன் (வேறு பிற பாடல்களிலும்) விளக்குகிறார். நாவுக்கரசரும் இதே கருத்தில் பல பாடல்களைத் தன் பாவநாசத் திருக்குறுந்தொகையில்[47] பாடியிருத்தல் ஈண்டு நினைந்தின்புறுதற்குரிதாம்.

பட்ட ராகிலென் சாத்திரங் கேட்கிலென்
இட்டு மட்டியு மீதொழில் பூணிலென்
எட்டு மொன்று மிரண்டு மறியிலென்
இட்ட மீசனென் னாதவர்க் கில்லையே

வேத மோதிலென் வேள்விகள் செய்கிலென்
நீதி நூல்பல நித்தல் பயிற்றிலென்
ஓதி யங்கமோ ராறு முணரிலென்
ஈச னையுள்கு வார்க்கன்றி யில்லையே

கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்கும ரித்துறை யாடிலென்
ஒங்கு மாகட லோதநீ ராடிலென்
எங்கு மீசனென் னாதவர்க் கில்லையே

கூட வேடத்த ராகிக் குழுவிலென்
வாடி யூனை வருத்தித் திரியிலென்
ஆடல் வேடத்த னம்பலக் கூத்தனைப்
பாட லாளர்க்கல் லாற்பய னில்லையே

என்பன போல் வரும் பாடல்கள் இதனை விளக்குவதைக் காணலாம்.

## பற்றற்றிருப்பார் நிலை

இப்பகுதியில் பற்றினை விட்டு இருப்பார்க்கு உடம்பு முதலானவை சுமையானவை என்று உரைக்கின்றார்.

மற்றும் தொடர்ப்பாடு யெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை[48]

என்னும் குறட் கருத்தை வலியுறுத்தும் வண்ணம் இப்பாடலில் ஆசிரியர் பிறப்பறுக்கல் உற்றார்க்கு மிகையாவன இவையிவை என விளக்கிச் செல்கின்றார்.

ஊரும் சதமல்ல வுற்றார் சதமல்ல வுற்றுப்பெற்ற
பேரும் சதமல்ல பெண்டிற் சதமல்ல பிள்ளைகளுஞ்
சீரும் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்தில்
யாருஞ் சதமல்ல நின்றான் சதங்கச்சி யேகம்பனே[49]

எத்தாயர் எத்தந்தை எச்சுற் றத்தார்
எம்மாடு சும்மாடாம் ஏவர் நல்லார்
செத்தால்வந் துதவுவார் ஒருவ ரில்லை
சிறுவிறகால் தீமூட்டிச் செல்ல நிற்பர்
சித்தாய வேடத்தாய் நீடு பொன்னித்
திருவானைக் காவுடைய செல்வா என்றன்
அத்தாவுன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லசண்டங் கொண்டடியேன் என்செய் கேனே[50]

உற்றாரை யான்வேண்டேன்
ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்[51]

எனவரும் பாடல்களும், பாடற்பகுதிகளும் பற்றறுக்கல் உற்ற ஞானியர் கள் தமக்கு எவையெல்லாம் மிகையாக இருந்தன என்பதையும், அவை களை வெறுத்தமையையும் விளக்கியுரைப்பதைக் காணலாம்.

## உறவு முறை

தந்தை யிலைச்சுமடன் றாய்தொழிலி தான் பார்ப்பான்
எந்தைக்கி ஏதங்கனம் பட்டதுகொல்—முந்தை
அவியுணவி னார்தெரியி னாவதாங் கொல்லோ
கவிகண்ண னார்தம் பிறப்பு[52]

என்னும் பாடல் ஈண்டு ஒப்பிட்டு மகிழ்தற்குரியது.

## வழிபாடு

இறைவன் நமக்கு ஒவ்வொரு உறுப்பையும் தந்தது நமக்குப் பயன்பட வேண்டும் என்ற நோக்கில் மட்டுமல்ல; ஒவ்வொன்றாலும் தன்னை வணங்க வேண்டும் என்பதற்காகவுமே தந்துள்ளான் எனலாம். வாயால் வாழ்த்தவும், மனதால் நினைக்கவும், மெய்யால் வழிபடவும் இப்படி எல்லா உறுப்புகளாலும் இறைவனை வழிபட வேண்டும் என்பதை மெய்யடியார்களும், ஞானிகளும் உணர்த்திச் சென்றுள்ளனர். பஞ்சாங்க வணக்கம், அட்டாங்க வணக்கம் என்பனவும் இதைக் குறிப்பனவே யாம். ஆசிரியரும் இதனைச் கூறியுள்ளார். இப்பாடலில் மட்டுமன்றி பிறிதொரு பாடலிலும் (89) இதனை வலியுறுத்தியுள்ளார்.

திருநாவுக்கரசரும் இதை மனதில் கருதியே,

வாழ்த்த வாயு நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேனெடுங் காலமே[53]

எனவும்,

பிறிதோரிடத்தில்[54]

தலையே நீ வணங்காய் — தலை
மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத்
தலையே நீவணங்காய்
கண்காள் காண்மின்களோ — கடல்
நஞ்சுண்ட கண்டன்றன்னை
எண்டோள் வீசிநின் றாடும்பி ரான்றனைக்
கண்கள் காண்மின்களோ

செவிகாள் கேண்மின்களோ — சிவன்
எம்மிறை செம்பவள
எரிபோன் மேனிப்பி ரான்றிற மெப்போதும்
செவிகாள் கேண்மின்களோ

மூக்கே நீமுரலாய் — முது
காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கைம ணாளனை
மூக்கே நீ முரலாய்

வாயே வாழ்த்து கண்டாய் — மத
யானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்தன்னை
வாயே வாழ்த்துகண்டாய்

நெஞ்சே நீநினையாய் — நிமிர்
புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கைம ணாளனை
நெஞ்சே நீநினையாய்

கைகாள் கூப்பித்தொழீர் — கடி
மாமலர் வாவிநின்று

பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித்தொழீர்
ஆக்கை யாற்பயனென் — யரன்
கோயில் வலம்வந்து

பூக்கையா லட்டிப் போற்றியென் னாதவிவ்
வாக்கை யாற்பயனென்
கால்க ளாற்பயனென் — கறை
கண்ட னுறைகோயில்
கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக்
கால்க ளாற்பயனென்

எனவும் போற்றி உரைத்தனர் போலும்.

### சிவயோகம்

சிவயோக மாவது சித்தசித் தென்று
தவயோகத் துள்புக்குத் தன்னொளி தானாய்
அவயோகஞ் சாரா தவன்பதி போக
நவயோக நந்தி நமக்களித் தானே[55]

எனச் சிவ யோகத்தில் விளக்கம் தருவர் திருமூலர். யோகம் என்பது பொருந்துதல் என்ற பொருளைத் தரும். மனத்தினை ஒருநிலைபடுத்தி, இறைவனுடன் பொருந்தலே யோகம் எனப்படும். சிவனுடன் பொருந்தும் நிலையில் யோகம் 'சிவயோகம்' என்று அழைக்கப்படுகிறது. யோகத்தின் உயர்நிலையை 'அட்டாங்க யோகத்தில்' காணலாம். அட்டாங்க யோகமாவது, எட்டுப் படிநிலைகளில் கூறப்படும் யோக நெறியாகும். இதனையும் திருமூலர் விரித்துரைப்பர். அட்டாங்க யோகத்தின் எட்டுப் படிநிலைகள்,

இயம நியமமே எண்ணிலா ஆதனம்
நயமுறு பிராணாயா மம்பிரத்தி யாகாரஞ்
சயமிகு தாரடின தியானஞ் சமாதி
அயமுறும் அட்டாங்க மாவது மாமே[56]

என்பனவாம்.

### கூத்தாடும் மயில்

ஆடும் பரிவேலி அணிசே வலெனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்

தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாமுந் தனியா னைசகோ தரனே[57]

என்னும் பாடல் ஈண்டு நினைந்தின்புறத்தக்கது.

### சகல கலை கற்றல்

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்
கரடிவெம் புலிவாயையுங்
கட்டலாம் ஒருசிங்கம் முதுகின்மேற் கொள்ளலாங்
கட்செவி எடுத்தாட்டலாம்
வெந்தழலின் இரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணாமல் உலகத் துலாவலாம்
விண்ணவரை ஏவல் கொளலாம்
சந்ததமும் இளமையோ டிருக்கலாம் மற்றொரு
சரீரத்தி லும்புகுதலாஞ்
சலமேல் நடக்கலாங் கனல்மே லிருக்கலாந்
தன்னிகரில் சித்திபெறலாம்
சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
திறமரிது சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே[58]

எனும் தாயுமானவடிகள் பாடல் ஈண்டு நினைந்து ஒப்புநோக்குதற்கு உரியதாம்

### சீவன் ஒன்று

வெவ்வேறு விதமான பாண்டங்களாக இருப்பினும் அதைச் செய்யற் பட்ட மண் ஒன்றாவது போலவும், பலநிறம் உடையதாய் இருப்பினும் பசுக்கள் எல்லாம் தரும் பால் ஒன்றாக இருப்பதுபோலவும், பிறவி தோறும் வேறுவேறு உயிரினங்களாகப் பிறப்பினும் அவற்றின் எல்லா வற்றிலும் இருக்கும் உயிர் ஒன்றே என்னும் கருத்தை ஈண்டு விளக்கியுள் ளார்.* இதனையே பாரதியாரும் தன் உரைநடையில்,

> உன்னுடைய ஆத்மாவும் உலகத்தினுடைய ஆத்மாவும் ஒன்று. நீ, நான், முதலை, ஆமை, ஈ, கருடன், கழுதை எல்லோரும் ஒரே உயிர். அந்த உயிரே தெய்வம்.[59]

என உரைத்துச் செல்வதைக் காணலாம்.

## கோரக்கநாதர்

இவர் ஒரு சித்தர். இவர் கஞ்சாவை முதல் சரக்காகக் கொண்டமையின் அதற்கும் கோரக்கர் மூலம் எனப் பெயர். இவர் செய்த வைத்திய நூல் கோரக்கர் வைப்பு. இவர் மச்சேந்திரர் என்பாரின் மாணாக்கர்.

## அடியார் திடம்

உண்மையான அன்பு பூண்ட பக்தர்கள் யாருக்கும் எதற்கும் அஞ்சார் என்பதை இப்பாடலில் விளக்கி உள்ளார். இதனைச்

சலங்காணும் வேந்தர் தமக்குமஞ் சார்யமன் சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு கார்துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்குங் கரடிக்கும் யானைக்கும் கந்தனன்னூல்
அலங்கார நூற்று ளொருகவி தான்கற் றறிந்தவரே[60]

நாமார்க்குங் குடியல்லோ நமனை யஞ்சோ
நரகத்தி லிடர்ப்படோ நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோ
மின்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்று மீளா வாளாய்க்
கொய்ம்மலர்சே வடியினையே குறுகி னோமே[61]

என வரும் மெய்யடியார் பாடல்களால் அறியலாம்.

## நன்மையுடன் ஆளல்

துர்ச்சனர், துயரம், பிணி, சூது, நச்சரவு, பேய், பில்லி, சூனியம் இவையெல்லாம் தம்மை அணுகாமல் தன்னை ஆள வேண்டும் என ஆசிரியர் இப்பாடலில் வேண்டுகின்றார்.

...........சந்ததமும்
பல்கோடி சன்மப் பகையும் அவமிருந்தும்
பல்கோடி விக்கினமும் பலபிணியும் — பல்கோடி
பாதகமும் செய்வினையும். பாம்பும் பசாசும்அடல்
பூதமும்தீ நீரும் பொருபடையும் — தீதகலா
வெவ்விடமும் துட்ட மிருகமுத லாம்எவையும்
எவ்விடம்வந் தெம்மை எதிர்த்தாலும் — அவ்விடத்தில்

பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்தோளும்
அச்சம் அகற்றும் அயில்வேலும் — கச்சைத்
திருவரையும் சீறடியும் செங்கையு மீராறு
அருள்விழியும் மாமுகங்கள் ஆறும் — விரிகிரணம்
சிந்தப் புனைந்த திருமுடிகள் ஓராறும்
எந்தத் திசையும் எதிர்தோன்ற — வந்திருக்கண்
எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமும் கந்துபுகிற்
துல்லாச மாக உளத்திருந்து......................[62]

என குமரகுருபர அடிகளும் செந்திற்பதியானிடம் வேண்டுவதை ஈண்டு ஒப்பிட்டு மகிழலாம்.

## தினகரனை ஒத்தல்

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு[63]

எனும் முருகாற்றுப்படை அடிகளும் முருகனை தினகரனுக்கு ஒப்பிட்டு உரைப்பதைக் காணலாம்.

## ஆறங்கம்

ஆறங்கமாவன மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்பனவாம்.

மந்திரஞ் சூத்திர வியாகரண நிகண்டு
சந்தோ பிசித நிருத்தஞ் சோதிட
மென்றென வேதத் தாறங்க மென்ப[64]

என்னும் நூற்பாவால் இதனை அறியலாம்.

## பிறரைப் புகழாத வரம்

உண்மை பக்தி பூண்டோர் தெய்வத்தைப் பாடும் வாயால், மானுடரைப் பாடார். அதுவும் தகுதி இல்லாத மானுடரை ஒருகாலும் ஒவ்வார். அவ்வாறான ஒரு சூழல் தனக்கு எந்நாளும் வருவதை விரும்பார். ஆசிரியரும் அதற்கு விலக்கல்லர். மட்டியை அறிவுடையோர் என்றும், குருடரைப் பார்வையுடையோர் என்றும் ஈயாவம்பரைக் கொடையாளர் எனவும், சோம்பரை மாபுருடர் எனவும், அலியைக் கட்டழகுடையார் எனவும், பேடியைக் கனவீரர் எனவும், பாவம் செய்வோரை தர்மவான் என்றும், வாக்குதவறுபவர்களைச் சத்தியவான் எனவும் பாடாத வரத்

தினை வேண்டுகிறார். இந்நிலையினை, தன திருப்புகலூர் பதிகத்தில், சுந்தரர் ஒவ்வொரு நிலையாக விரித்துப்பாடி இருப்பதைக் காணலாம்.

தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினுஞ்
சார்கி னுந்தொண்டர் தருகிலாப்
பொய்மை யாளரைப் பாடா தோயந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்

மிடுக்கி லாதானை வீம னேவிறல்
விசய னேவில்லுக் கிவனென்று
கொடுக்கி லாதானைப் பாரி யேயென்று
கூறி னுங்கொடுப் பாரிலை

நரைகள் போந்துமெய் தளர்ந்து மூத்துடல்
நடுங்கி நிற்கும் இக் கிழவனை
வரைகள் போல்திரள் தோள னேயென்று
வாழ்த்தி னுங்கொடுப் பாரிலை

வஞ்ச நெஞ்சினை மாச மக்களைப்
பாவி யைவழக் கில்லியைப்
பஞ்ச துட்டனைச் சாது வேயென்று
பாடி னுங்கொடுப் பாரிலை[65]

என இவ்வாறு அப்பதிகம் முழுதும் பாடிச் செல்வதைக் காணலாம்.

### தொண்டர் பெருமை

இப்பாடலில் ஆசிரியர் தொண்டராவார் தன்னை இன்னதென விளக்கி உரைக்கின்றார். ஒருவர் குணத்தாலும், சாதியாலும் இது போன்ற இன்ன பிறவற்றாலும் கீழானவராயினும் அவர் ஆண்டவனுக்கு அன்புடையார் ஆயின் அவர் தொண்டராகும் பெருமை உடையோர் என விளக்குகிறார். இக்கருத்திலேயே நாவின் அரசரும்,

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாகத் தருவ ரேனும்
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோ
மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யரோ
யாவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகி
லவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே[66]

எனப்பாடி யிருத்தலைக் காணலாம்.

## திசையானை எட்டு

ஐராவதம் புண்டரீகம் வாமனங் குமுத
மஞ்சனம் புட்பந்தஞ் சார்வ பூமஞ்
சுப்பிரதீப மெண்டிசை யானைப் பெயரே[67]

என்பனவாம்.

## மலரடி தரித்தல்

ஆசிரியர் முருகப்பெருமான் தனக்கு அருள்செய்த விதத்தைக் கூறுவது போல் இப்பாடலில் ஒருபகுதி அமைந்துள்ளது. அருணை மாநகரில், மன்னாருசாமி என்பார் வாழ்கின்ற கோட்டத்தில், மலர் வாவி சூழ்ந்த நந்தவனத்தில் தனக்கு அருளியதாகக் கூறுகிறார். ஆசிரியர் பெயர் அறியமுடியாமையினால் இதுபற்றிய விளக்கங்கள் மேலும் அறியமுடியவில்லை.

## ஆறாதாரம்

ஆறாதாரங்களையும் அவற்றிற்குரிய தெய்வங்களைப் பற்றியும் இப் பாடலின் ஆசிரியர் விளக்கி உள்ளார். ஆறாதாரமாவன மூலா தாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்சை என்பனவாம்.

மூலா தாரங் குதமென மொழிப
சுவாதிட் டானங் குய்ய மென்ப
மணிபூ ரகநா பியென வழங்குப
அநாகத மிதயமாமென மொழிப
விசுத்தி யடிநா வென்ன விளம்புவ
ஆஞ்சை நெற்றி யென்ன வறைகுப

எனவரும் நூற்பாக்களால் ஆறாதாரங்கள்[68] இவையென அறியலாம். இவற்றுக்குரிய இறைவர்களென முறையே கணபதி, நான்முகன், முகுந்தன், ருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் அறுவரையும் குறிப்ப.

# அடிக்குறிப்புகள்

1. திருக்கைலாய ஞானஉலா, கண்ணி, 200.
2. திருநாவுக்கரசர் தேவாரம், பா. 6:309-10.
3. திருமந்திரம், காப்புச் செய்யுள்.
4. யாப்பருங்கலக்காரிகை, உரைமேற்கோள், பா. 1.
5. திருவருட்பயன், காப்புச் செய்யுள்
6. பரிபாடல், பா. 8:1-10
7. பரிபாடல். பா. 5:1-10.
8. கந்தரலங்காரம், பா. 102.
9. திருமந்திரம் பா, 598.
10. குமரேச சதகம், பா. 1, 2, 3.
11. அவையாம்பிகை சதகம், பா. 1, 2, 3.
12. முப்பொருள் உண்மைவிளக்கம், பக். 142-143.
13. தமிழ்ப் பேரகராதி ப. 1234.
14. மேற்படி நூல், பா. 1232.
15. வீரசைவம், ப. 9-10.
16. Tamil English Dictionary of Medicine, Chemistry, Botany and allied Science, Vol. 3. p. 2081.
17. திருமந்திரம், பா. 127.
18. திருப்புகழ், பா. 1.
19. மேற்படி நூல், பா. 960.
20. கந்தர்கலிவெண்பா. கண்ணி 81-82.
21. குமரேச சதகம், பா. 1:1-2.
22. பரிபாடல், பா. 5:46-49.
23. கந்தர் கலிவெண்பா, கண்ணி 81-82.
24. கந்தர் கலிவெண்பா, கண்ணி, 92-94.
25. மேற்படி நூல் கண்ணி, 104-105.
26. மேற்படி நூல், கண்ணி, 109.
27. பொருட் தொகை நிகண்டு, நூற்பா 894.
28. பொருட்தொகை நிகண்டு, நூற்பா 895.
29. மேற்படி நூல் நூற்பா 986.
30. பிங்கல நிகண்டு நூற்பா 19.
31. பொருட்தொகை நிகண்டு, நூற்பா 704.
32. மேற்படி நூல் நூற்பா 704.
33. கந்தர் கலிவெண்பா, 106-108.
34. கந்தவேள் கருணை, பக். 103-104.

35. பிங்கலநிகண்டு, நூற்பா, 423.
36. மேற்படி நூல் நூற்பா 414.
37. திருவாசக விளக்கவுரை, சிவபுராணம், 26-30.
38. திருவாசக விளக்கவுரை, போற்றித்திருவகவல், 75-76.
39. மேற்படி நூல், திருவெம்பாவை, பா. 6:5.
40. மெய்கண்ட சாத்திரம், பகுதி 1, சிவஞானபோதம், நூற்பா 2.
41. கந்தரனுபூதி பா. 51.
42. கந்தர் கலிவெண்பா, கண்ணி 11.
43. பட்டினத்துப்பிள்ளையார் திருப்பாடல்கள், கோயிற்றிருகவல், 26-34.
44. பிங்கல நிகண்டு, நூற்பா 405.
45. திருமந்திரம் பா, 604.
46. திருவாசக விளக்கவுரை, போற்றித்திருவகவல், 10-41.
47. திருநாவுக்கரசர் தேவாரம், பா. 3:213:3, 4, 2, 7.
48. திருக்குறள், பா. 345.
49. பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள், பகுதி 2, தருவேகம்பமாலை, பா. 13.
50. திருநாவுக்கரசர் தேவாரம், 6:271:1.
51. திருவாசகம் விளக்கவுரை, திருப்புலம்பல், பா. 3:1.
52. யாப்பருங்கலக்காரிகை, மேற்கோள் செய்யுள், ப. 180.
53. திருநாவுக்கரசர் தேவாரம், பா. 5:204:7.
54. மேற்படி நூல், பா. 4:9:1-9.
55. திருமந்திரம், பா. 122.
56. திருமந்திரம், பா. 552.
57. கந்தரனுபூதி, பா. 1.
58. தாயுமானவடிகள் திருப்பாடல்கள், தேசர் மயானந்தம், பா. 8.
59. பாரதியார் கட்டுரைகள், தத்துவம், ப. 3.
60. கந்ரலங்காரம், பா. 101.
61. திருநாவுக்கரசர் தேவாரம், 6:312:1.
62. கந்தர் கலிவெண்பா, கண்ணி 11-117.
63. பத்துப்பாட்டு, திருமுருகாற்றுப்படை 1-2.
64. பிங்கலநிகண்டு நூற்பா, 402.
65. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம், பா. 340, 341, 343, 344.
66. திருநாவுக்கரசர் தேவாரம், 6:309:10.
67. பிங்கலநிகண்டு, நூற்பா 20.
68. பொருட்தொகை நிகண்டு, நூற்பாக்கள், 535, 536, 537, 538, 539, 540.

## பின்னிணைப்பு — 3

# சித்தாந்தச் சொற்கள்

(எண் பாடல் எண்)

## பின்னிணைப்பு — 4

# பிற தெய்வங்களின் பெயர்கள்

(எண் பாடல் எண்)

## பின்னிணைப்பு — 5

# விலங்குப் பெயர்கள்

(எண் பாடல் எண்)

| | |
|---|---|
| அரவு | 33 |
| அரி | 17 |
| அன்னம் | 37 |
| ஆ | 81 |
| ஆளி | 94 |
| ஆனை | 94 |
| உரகம் | 77 |
| உரை | 48, 49 |
| கடகரி | 37 |
| கம்பமாலியானை | 72 |
| கரடி | 8 |
| கரி | 33, 50 |
| கவளமரயானை | 13 |
| கன்று | 52, 81 |
| காக்கை | 44 |
| கிள்ளை | 5 |
| கிளி | 62 |
| குக்குடம் | 90 |
| குஞ்சரம் | 2, 54 |
| குண்டை | 41 |
| கும்பமதயானை | 53 |
| குயில் | 28, 81 |
| குரகதம் | 17 |
| குருகு | 66 |
| கொக்கு | 76 |
| கொஞ்சுகிளி | 62 |
| கொம்பானை | 38 |
| கோலமயில் | 61 |
| சிங்கம் | 100 |
| சிறகிலா பட்சி | 41 |
| சிறகு | 41 |
| சே | 3 |
| சேல் | 61 |
| சேவல் | 18, 80 |
| தகர் | 105 |
| தந்தி | 8 |
| திசையானை | 106 |
| தேள் | 24 |
| தோகைமயில் | 39 |
| நச்சரவு | 79 |
| நரி | 28 |
| நாய் | 53 |
| நீலமயில் | 54 |
| பசு | 4,1 |
| பட்சி | 41 |
| பணி | 16 |
| பாம்பு | 78 |
| புலி | 8 |
| மஞ்ஞை | 86, 104 |
| மடமயில் | 37 |
| மதயானை | 53 |
| மந்தி | 24 |
| மிருகம் | 77 |
| யானை | 24, 72 |
| வண்டு | 66, 81, 87, 105 |
| வண்ணமயில் | 22 |
| வருடை | 105 |
| வல்லிபம் | 23, 33 |
| வாரணம் | 24 |
| வெங்களிறு | 94 |
| வேங்கை | 51, 67, 91 |

## பின்னிணைப்பு — 6

# தாவரப் பெயர்கள்

(எண் பாடல் எண்)

### மரப்பெயர்கள்

| | |
|---|---|
| அகில் | 67 |
| அஞ்சுவடம் | 67 |
| ஆத்தி | 67 |
| ஆமலகம் | 67 |
| ஆலம் | 113 |
| இலவு | 67 |
| ஓரி | 67 |
| கடம்பு | 21, 30 |
| கடுக்கை | 49 |
| கதலி | 48, 67 |
| கமுகு | 48, 66 |
| கரவீரம் | 67 |
| கழை | 48 |
| கற்பகத்தரு | 16 |
| காமர் பூங்கொம்பு | 37 |
| குண்டி | 67 |
| கொம்பு | 37 |
| கொன்றை | 29, 55, 107 |
| சந்தனம் | 66 |
| சம்புவு | 67 |
| சிறுசெண்பகம் | 67 |
| சுரபுன்னை | 67 |
| சூதம் | 67 |
| தண்முளபம் | 103 |

### மலர்ப்பெயர்கள்

| | |
|---|---|
| ஆத்திமலர் | 107 |
| ஆம்பல் | 84 |
| கஞ்சமலர் | 7, 62 |
| கடப்பமலர் | 4, 17, 49, 87 |
| கந்தமலர் | 8 |
| கமலமலர் | 32, 37, 40, 43, 48, 60. |
| காந்தள் | 36 |
| காவி | 96 |
| குமுதம் | 30 |
| குவளை | 13, 83 |
| கொந்துவிழுமலர் | 14 |
| கொய்வனசமலர் | 100 |
| கோகனம் | 35, 63 |
| கலசமலர் | 8 |
| செங்கமலர் | 48 |
| செங்கழனி | 20, 26, 31, 50 |
| செங்காந்தள் | 36 |
| செண்பகம் | 23 |
| செந்தாமரை | 1 |
| செம்பதுமம் | 66 |
| செவ்வாம்பல் | 84 |
| தாது | 31 |
| தாமரை | 39, 54, 57 |
| தரு | 16, 67 |
| தழை | 49 |
| தளிரி | 36 |
| தாழை | 67 |
| திணை | 51 |
| திலதம் | 48 |
| துளபம் | 105 |
| தெங்கு | 67 |
| தேக்கு | 67 |
| பனசை | 67 |
| பாக்கு | 35 |
| பாடலம் | 67 |
| புளி | 67 |
| பூங்கொம்பு | 37 |
| மகிழ் | 21, 62 |
| மஞ்சள் | 92 |

## பின்னிணைப்பு — 7

# இடப்பெயர்கள்

**(எண் பாடல் எண்)**

## பின்னிணைப்பு — 8

# உவமைகள் — அகரநிரல்

| (எண் | பாடல் எண்) |
|---|---|
| அம்புய மடந்தைக்கு நிகரான குறவள்ளி | — 36 |
| அம்புய மலர்க்கு நிகரான கண்கள் | — 45 |
| அலை ஆழி காணாத போல் | — 81 |
| அனல்மெழுகு போல் | — 45 |
| அனலிடு மெழுகு போல் | — 27 |
| ஆசானைக்காணாத சீடன் போல் | — 81 |
| ஆவினைக் காணாத கன்று போல் | — 81 |
| இழையனத் துவன்றிடு மருங்குல் | — 48 |
| உயர் மதியை யொத்த முகம் | — 48 |
| உழை நோக்கின் அம்பிகை | — 49 |
| உழை னோக்கிக் கண்கள் | — 48 |
| கண்ணினை வாரிவளர் கயல் | — 23 |
| கதிர் விளக்கினைச் சேர்ந்த கற்பூரம் போலவும். | — 74 |
| கதலியெனு மிருதுடை | — 48 |
| கமுகென நிகழ்ந்திடுங் கந்தரம் | — 48 |
| கயிலைமலை நிகரொத்த..... சிவமலை | — 6, 7, 8, 9, 10 |
| கரை காணா வம்பி போல் | — 81 |
| கழிசூழ்ந்த அலையாழி தன்னிலே ஆற்றுநீர் கலந்திடுதல் போல் | — 74 |
| கழைபொருவு தோள்கள் | — 48 |
| களிகொண்டு நரியுண்ணு கட்டமுது மூட்டை | — 28 |
| கனல்தனைக் கண்ட மெழுகு | — 28 |
| கனல் போலவே | — 34 |
| காக்கை போல் | — 44 |
| காமனேர் வடிவன் | — 14 |
| கார்மேகம் காணா மயில்போல் | — 81 |
| கார்ணக பந்தி | — 36 |
| காவினைக் காணாத குயில் போல் | — 81 |
| குயில்கொண்ட குரலினாள் | — 28 |
| குழைபொருந்து கண்ணி | — 49 |
| கொண்டல் பொருவாளரக் குறமங்கை | — 34 |
| கொண்டலெனு மெய்யன் | — 46 |

## பின்னிணைப்பு — 9

# இதுவரை தெரியவந்துள்ள சதக இலக்கியங்கள்

| | |
|---|---|
| 1. அகத்தீசர் சதகம் | மஸ்தான் சாகிப் |
| 2. அண்ணாமலைச் சதகம் | சேலம் சிதம்பரம்பிள்ளை |
| 3. அர்ச் தேவமாதா சதகம் | பொன்னுசாமி முதலியார் |
| 4. அரபிச் சதகம் | அப்துல் ரகுமான் |
| 5. அருணாசல சதகம் | சபாபதி முதலியார் |
| 6. அவிநாசி கருணாம்பிகை சதகம் | வாசுதேவ முதலியார் |
| 7. அவையாம்பிகை சதகம் | மாயூரம் கிருஷ்ணய்யர் |
| 8. அறப்பளீச்சுர சதகம் | அம்பலவாணக் கவிராயர் |
| 9. ஆத்மபோதேச் சதகம் | நாராயணதேவர் |
| 10. இயேசுநாதர் சதகம் | |
| 11. இராமாயண சதகம் | முருகேச செட்டியார் |
| 12. இலக்குமி காந்த சதகம் | சீனிவாச அய்யர் |
| 13. ஈழமண்டல சதகம் | வேல்பிள்ளை |
| 14. உமாயேசுர சதகம் | வேல்பிள்ளை |
| 15. எம்பிரான் சதகம் | கோபாலகிருஷ்ணதாசர் |
| 16. எதிராச சதகம் | இராமாநுச நாவலர் |
| 17. கஞ்சகிரி சித்தேசர் சதகம் | அனந்தநாராயண சர்மா |
| 18. கந்தபுராண சதகம் | முத்துக்குமாரதாசன் |
| 19. கருணாம்பிகை சதகம் | |
| 20. கருப்பண்ணசாமி சதகம் | இராமசாமிக் கவிராயர் |
| 21. கழுகாசல சதகம் | சண்முகம்பிள்ளை |
| 22. காந்தி சதகம் | சுந்தர முதலியார் |
| 23. கார்மண்டல சதகம் | ஆறைக்கிழார் |
| 24. கானாட்டுச் சதகம் | |
| 25. குமரேச சதகம் | குருபாததாசர் |
| 26. குருநாத சதகம் | கருணையானந்த சுவாமிகள் |
| 27. குருநாத சதகம் | சேலம் சிதம்பரம்பிள்ளை |
| 28. கைலாசநாதர் சதகம் | சிதம்பரவாணர் |
| 29. கைலாசநாதர் சதகம் | கைலாசநாதக் கவிஞர் |
| 30. கொங்குமண்டல சதகம் | கார்மேகக் கவிஞர் |
| 31. கோகுல சதகம் | அமிர்தகவிராயர் |
| 32. கோதண்டராம சதகம் | இராமதாசன் |
| 33. கோபிநாத சதகம் | கிருஷ்ணமூர்த்தி |
| 34. கோவிந்த சதகம் | அம்பலவாணக் கவிராயர் |

| | |
|---|---|
| 35. கோவிந்த சதகம் | நாராயணபாரதி |
| 36. சங்க சதகம் | |
| 37. சங்கர சதகம் | வா. சி. சுப்பிரமணிய செட்டியார் |
| 38. சதானந்த சதகம் | பொன்னுசாமி |
| 39. சதுரலிங்க சதகம் | |
| 40. சன்மார்க்க சதகம் | வேதகிரி முதலியார் |
| 41. சிங்காரவேலர் சதகம் | முத்துசாமி கவிராயர் |
| 42. சிருங்கார சதகம் | சுவாமிநாத தேசிகர் |
| 43. சிவகாமியம்மை சதகம் | மாயூரம் கிருஷ்ணய்யர் |
| 44. சிவசங்கர சதகம் | வீராசாமி உபாத்தியாயர் |
| 45. சிற்சுகவாரித சதகம் | மாத்ருபூதம், பிள்ளை |
| 46. சீறாச் சதகம் | இபின் அகமத் |
| 47. சீனிவாச சதகம் | அனந்தநாத சுவாமிகள் |
| 48. சுமதி சதகம் | சமரபுரி முதலியார் |
| 49. செயங்கொண்டார் சதகம் | முத்தப்பச் செட்டியார் |
| 50. செல்லாண்டியம்மன் சதகம் | சக்ரபாணி ஆசாரியார் |
| 51. சொக்கலிங்க கடவுள் தோத்திர சதகம் | சோமசுந்த சுவாமிகள் |
| 52. சோழமண்டல சதகம் | ஆத்மநாத தேசிகர் |
| 53. தசரதராம சதகம் | மாவலிங்கப்பிள்ளை |
| 54. தண்டலையார் சதகம் (பழமொழி விளக்கம்) | படிக்காசுப் புலவர் |
| 55. தியாகராச சுவாமி சதகம் | ப. சோமசுந்தர தேசிகர் |
| 56. திருச்சதகம் | சதாசிவம்பிள்ளை |
| 57. திருச்செங்கோட்டுச் சதகம் | கிருஷ்ணசாமி முதலியார் |
| 58. திருச்செந்தில் விநாயகர் சதகம் | தண்டபாணி அடிகள் |
| 59. திருத்தொண்ட சதகம் | மலைக்கொழுந்து நாவலர் |
| 60. திருத்தொண்டர் சதகம் | மாம்பழக் கவிச்சிங்க நாவலர் |
| 61. திருப்போரூர் சதகம் | சபாபதி முதலியார் |
| 62. திருப்போரூர் பீரணவாசல சதகம் | சபாபதி முதலியார் |
| 63. திருவருட் சதகம் | மெய்யப்பச் செட்டியார் |
| 64. திருவேங்கட சதகம் | நாராயணபாரதி |
| 65. தில்லைக் கற்பக விநாயகர் சதகம் | சிதம்பர செட்டியார் |
| 66. தில்லைச் சிவகாம சுந்தர சதகம் | அய்யாத்துரை ஞானியார் |
| 67. தில்லை நடராஜ சதகம் | மாயூரம் இராமையர் |
| 68. தொண்டைமண்டல சதகம் | படிக்காசுப் புலவர் |

| | | |
|---|---|---|
| 69. | நடராஜ சதகம் | சிதம்பரநாத முதலியார் |
| 70. | நந்திமண்டல சதகம் | தெய்வநாயகப் பெருமான் |
| 71. | நந்தீசர் சதகம் | மஸ்தான் சாகிப் |
| 72. | நானிலைச் சதகம் | தண்டபாணி அடிகள் |
| 73. | நியாயச் சதகம் | |
| 74. | நீதிச் சதகம் | சுவாமிநாத தேசிகர் |
| 75. | பிர்த்ருஹரி நீதிச் சதகம் | மாணிக்கவாசகம் பிள்ளை |
| 76. | பழனியாண்டவர் சதகம் | ஐய்யம் பெருமாள் |
| 77. | பிரதான சதகம் | ஸ்ரீமத் வேதாந்ததேசிகர் |
| 78. | புவனேசுவரி சதகம் | |
| 79. | பூவை சிங்கார சதகம் | மனோன்மணியம்மை |
| 80. | பொய்யாமொழீசர் சதகம் | |
| 81. | மகாபாரத சதகம் | |
| 82. | மணவாள நாராயண சதகம் | நாராயணபாரதி |
| 83. | மயிலாசல சதகம் | நமச்சிவாயநாவலர் |
| 84. | மழவை சிங்கார சதகம் | மகாலிங்க அய்யர் |
| 85. | மனுநீதிச் சதகம் | வேதகிரி முதலியார் |
| 86. | மனுவியாக்யான சதகம் | வேதகிரி முதலியார் |
| 87. | மீனாட்சியம்மை சதகம் | மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| 88. | முத்துக்குமர ஞானியார் சதகம் | எம். ஆதிமூலப்பெருமாள் |
| 89. | முகையதீன் சதகம் | அப்துல்காதர் பேகம்பூர் |
| 90. | மெய்கண்ட வேலாயுத சதகம் | அழகுமுத்துப் புலவர் |
| 91. | வடவேங்கட நாராயண சதகம் | சேலம் சிதம்பரம் பிள்ளை |
| 92. | வடவேடங்கட நாராயண சதகம் | திவ்யகவி நாராயண தாசர் |
| 93. | வடிவேலர் சதகம் | |
| 94. | வானமாமலைச் சதகம் | தெய்வநாயகப் பெருமாள் |
| 95. | விசுவகுல சதகம் | |
| 96. | விரிஞ்சேசர் சதகம் | |
| 97. | வீரபத்த சதகம் | சின்னத்தம்பி |
| 98. | வீரராகவ சதகம் | |
| 99. | வேலாபுரி கருப்பண்ணசாமி சதகம் | ராமசாமி கவிராயர் |
| 100. | வேலாயத சதகம் | சந்தப்பையர் |
| 101. | வைகுந்த சதகம் | |
| 102. | வைத்திய சதகம் | பா. முகம்மது அப்துல்லா |
| 103. | வைராக்கிய சதகம் | சாந்தலிங்க சுவாமிகள் |
| 104. | வைராக்கிய சதகம் | சுப்பையா சுவாமிகள் |

# பாடல் முதற் குறிப்பகராதி

(எண் பாடல் எண்)

# சொல்லகராதி

(எண் பாடல் எண்)

## அ

## ஆ

## இ

**கா**

கூ



## சே



## கொ

## தா



## தி

## தூ



## தெ



## தே



## தை



## தொ



## தோ



## ந

## பி



## பு

## பூ



## பெ



## பே



## பை



## பொ

## வை



## வா



## வி

# துணைநூற்பட்டியல்


1. அகநானூறு, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், (சை. சி. நூ. ப. கழகம்), சென்னை.

2. அவிநாசிநாதர் தோத்திரக் கொத்து, ஞானியார் சுவாமிகள் மடாலயம், திருப்பாதிரிப்புலியூர், 1939.

3. அறுவகைச் சமயம், சுப்பிரமணிய அய்யர், ஏ. வி; 76 மேலத்தெரு, சி. என். வில்லேஜ், திருநெல்வேலி, 1973.

4. ஆறுபடைக்குமரன், கிருஷ்ணன் கே. வி., (நாகர்கோவில்), சங்கரி பதிப்பகம், தி. நகர், சென்னை, 1978.

5. ஊஞ்சல் இலக்கியம், அழகப்பராசு. த., உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், உ. த. நி., சென்னை, 1983.

6. கந்தர் கலிவெண்பா, ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள், 1979.

7. கந்தக்கோட்டம் செந்துறைமுத்து, முத்துப் பதிப்பகம், வளவனூர், 1973.

8. கந்தவேள் கருணை, கிருபானந்த வாரியார், வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை, 1973.

9. கந்தரந்தாதி, சை. சி. நூ. ப. கழகம், சென்னை, 1971.

10. கந்தரனுபூதி, சை. சி. நூ. ப. கழகம், சென்னை, 1971.

11. கந்தரலங்காரம், சை. சி. நூ. ப. கழகம், சென்னை, 1970.

12. கம்பராமாயணம், ஆரணிய காண்டம், உ. வே. சா. நூலகம், திருவான்மியூர், சென்னை, 1959.

13. கலைக்களஞ்சியம், (4) தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1956.

14. கலைக்களஞ்சியம், (5) தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1958.

15. கலைக்களஞ்சியம் (8) தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1961.

16. குமரேச சதகம், சை. சி. நூ. ப. கழகம், சென்னை, 1980.

17. கோவல் ஆதீனக் குருமணி, வேல்முருகன் த. பா, ஸ்ரீமத் ஞானியார் மடாலய வெளியீடு, திருப்பாதிரிப்புலியூர், 1967.

18. சதக இலக்கியங்கள், செயராமன், ந. வீ, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1978.

19. சதகத்திரட்டு, (1) சை. சி. நூ. ப. கழகம், சென்னை, 1968.

20. சிவப்பதிகள் வரலாறு, சை. சி. நூ. ப. கழகம், சென்னை, 1977

21. சிற்றிலக்கியச் சிந்தனைகள், கு. முத்துராசன், தேன்தமிழ்ப் பதிப்பகம், சேலம், 1980.

22. சிற்றிலக்கியச் செல்வங்கள், செயராமன், ந. வீ., மணிவாசகர் நூலகம், சிதம்பரம் 1967.

23. சிற்றிலக்கியத் திறனாய்வு, செயராமன், ந. வீ. இலக்கியப் பதிப்பகம், சென்னை, 1980.

24. சிற்றிலக்கிய வளர்ச்சி, சண்முகம்பிள்ளை, மு. மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1981.

25. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம், தருமையாதீனம், தருமபுரம், 1964.

26. ஞானியுர் அடிகள் நினைவுமலர், சைவ சித்தாந்த மகாசமாஜம், சென்னை, 1958.

27. தண்டியலங்காரம், சை. சி. நூ. ப. கழகம், சென்னை 1971.

28. தமிழ் இலக்கியக் கொள்கை (2), உ. த. நி. சென்னை, 1977.

29. தமிழ் இலக்கியக் கொள்கை (3), உ. த. நி. சென்னை, 1978.

30. தமிழ்ப் பேரகராதி, (தொகுதி, 3) சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1929.

31. தாயுமாணவடிகள், திருப்பாடல்கள், சை.சி. நூ. ப. கழகம், சென்னை, 1966.

32. திராவிட மொழி இலக்கியங்கள், சுப்பிரமணியன், ச. வே. உ. த. நி. சென்னை, 1983.

33. திருக்கைலாய ஞானவுலா, தருமையாதீனம், தருமபுரம், 1960.

34. திருநாவுக்கரசர் சுந்தரர் தேவாரப் பதிகங்கள் (4, 3, 6, 7) சை. சி. நூ. ப. கழகம், சென்னை, 1974.

35. திருப்புகழ் திரட்டு, நீலாம்பாள் சுப்பிரமணியம் (தொகுப்பு), நீலாம்பாள் பதிப்பகம், சேலம், 1975.

36. திருமந்திரம், வரதராஜன், ஜி (உரை) பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1978.

37. திருவருட்பயன், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள், 1978.

38. திருவாசகம் விளக்கவுரை, சை. சி. நூ. ப. கழகம், சென்னை, 1968.

39. நன்னூல் விருத்தியுரை, பாரிநிலையம், சென்னை, 1971.

40. மீனாட்சியம்மன் திருப்புகழ், மாதவன், வே. இரா, உ. நி, சென்னை, 1963.

41. முப்பொருள் உண்மை விளக்கம் இளையதம்பி, மு. சைவப்பிரகாச கச்சி மந்திர சாலை, யாழ்ப்பாணம்.

42. முருகன் அல்லது அழகு, கல்யாணசுந்தரனார், திரு. வி, அரசு புக் டிப்போ, மைலாப்பூர், சென்னை, 1971.

43. முருகன் உறைவிடங்கள், முத்துப்பிள்ளை, சி. தணிகைப் பதிப்பகம், சென்னை, 1973.

44. மெய்கண்டசாத்திரம், (1) சை. சி. நூ. ப. கழகம், சென்னை, 1969.

45. பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள், (2 பகுதிகள்) சை. சி. நூ. ப. கழகம், சென்னை, 1967.

46. பத்தாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு, அருணாசலம், மு. காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், மாயூரம், 1972.

47. பத்துப்பாட்டு, உ.வே.சா. நூலகம், திருவான்மியூர், சென்னை, 1974

48. பரிபாடல், உ. வே. சா. நூலகம், திருவான்மியூர், சென்னை, 1980.

49. பன்னிரு சதகத்திரட்டு, இரத்தினநாயகர் & சன்ஸ், சென்னை, 1950.

50. பாரதியார் கட்டுரைகள் — தத்துவம், (பகுதி 17) சுப்பிரமண்யபாரதி பிரசுராலயம், சென்னை, 1955.

51. பிங்கல நிகண்டு, சை. தி. நூ. ப. கழகம், சென்னை, 1968.

52. பொருட்டொகை நிகண்டு, செந்தமிழ்ப் பிரசுரம், மதுரை, 1953.

53. யாப்பருங்கலக் காரிகை, உ. வே. சா., சென்னை, 1968.

54. வீரசைவம், இரத்தினசபாபதி, வை, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1972.

55. ஸ்ரீ சண்முக தரிசனம், கிருஷ்ணன் (நாகர்கோயில்) மீனா புத்தக நிலையம், அபிராமபுரம், சென்னை, 18.

56. Tamil-English Dictionary of Medicine, Chemistry, Botany and Allied Science. Vol. 3, Sambasivam Pillai T. V., The Research Institute of Siddha's Science, Madras, 1931.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## சுவடி நூல்கள் வெளியீடு

| | | | |
|---|---|---|---|
| 1. | பணவிடு தூது, (பதி.) இரா. நிர்மலாதேவி | 6 | 00 |
| 2. | கூவநூல், (பதி.) ச.வே. சுப்பிரமணியன் | 7 | 50 |
| 3. | பிரபந்த தீபம், (பதி.) ச.வே. சுப்பிரமணியன் | 5 | 00 |
| 4. | பிரபந்தத், திரட்டு, (பதி,) அன்னிதாமசு | 16 | 00 |
| 5. | மனைநூல், (பதி ) பூ. சுப்பிரமணியம் | 15 | 00 |
| 6. | கருவூரார் பலதிரட்டு, (பதி.) இரா. நிர்மலாதேவி | 12 | 00 |
| 7. | சுவடியியல் பயிற்சி கையேடு, மு.கோ. ராமன் | 6 | 00 |
| 8. | கும்மிப் பாடல்கள், (பதி ) ஏ.என். பெருமாள் | 16 | 00 |
| 9. | பிரபந்த தீபிகை, (பதி.) ச.வே. சுப்பிரமணியன் & அன்னிதாமசு | 12 | 00 |
| 10. | கண்மருத்துவம், (பதி.) வே.இரா. மாதவன் | 50 | 00 |
| 11. | திருமயிலை, உலா, (பதி.) மு.கோ. ராமன் | 7 | 00 |
| 12. | திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத் தமிழ், (பதி.) ச. சிவகாமி | 10 | 00 |
| 13. | ஊஞ்சல் இலக்கியம், (பதி.) த. அழகப்பராசு | 10 | 00 |
| 14. | மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழ், (பதி.) வே. இரா. மாதவன் | 7 | 00 |
| 15. | தமிழ்ச் சுவடிகள் அட்டவணை, இரா. நிர்மலாதேவி | 6 | 00 |
| 16. | Siddha Medical Manuscripts in Tamil, V.R. Madhavan | 8 | 00 |
| 17. | தன்வந்திரி குழந்தை வாகடம், (பதி.) க. லலிதாம்பிகை | 14 | 00 |
| 18. | வர்ம சூத்திரம், (பதி.) செ. ஜான் செல்வராஜ் | 10 | 00 |
| 19. | மருந்து செய்முறைகள், (பதி.) தி. லலிதா | 45 | 00 |
| 20. | வாத்தியமரபு, (பதி.) அ.நா. பெருமாள் | 20 | 00 |
| 21. | சுவடியியல், பூ. சுப்பிரமணியம் | 48 | 00 |
| 22. | புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை, (பதி.) மொ. மருதமுத்து | | |
| 23. | தோட்டுக்காரி கதை, (பதி.) வ. அலமேலு | 28 | 00 |
| 24. | தேரையர் அந்தாதி, (பதி.) டாக்டர் மா. புனிதா | 33 | 00 |
| 25. | குணவாகடம், (பதி.) வே. நெடுஞ்செழியன் | 40 | 00 |
| 26. | குசலவர் சுவாமி கதை, (பதி.) இரா. வசுமதி | 36 | 00 |